உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

அந்தகக்கவி வீரராகவ முதலியார்

இயற்றியது

கல்குளம் - குப்புசாமிமுதலியார், பி. ஏ.

பதிப்பித்தது

சென்னை

மினேர்வா அச்சியந்திரசாலை

1902

# சிறப்புப்பாயிரம்



கும்பகோணம் காலெஜ் தமிழ்ப்பண்டிதர்

## பிரமஸ்ரீ· உ· வே· சாமிநாத ஐயரவர்கள்

சொல்லிய

**கட்டளைக் கலித்துறை.**

கண்ணுடை யென்னுங் குறட்கிலக் காகிக் கவின்றிலங்கும்
பண்ணுடைச் செல்வன் கவிவீர ராகவன் பாடியசீர்
அண்ணுடைச் செய்கை முருகன்பிள் ளைக்கவி யாய்ந்துபதித்
தெண்ணுடைக் கல்குளம் வாழ்குப்பு சாமிநன் றீந்தனனே.



தஞ்சாவூர்

## பிரமஸ்ரீ. சதாவதானம் சுப்பிரமணிய ஐயரவர்கள்

சொல்லிய

**அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.**

அகக்கண்ணொன் றேகொண்டு கவிவீர ராகவனன்
றளித்தான் சேயூர்க்
குகற்கண்பிள் ளைத்தமிழை யின்றதனைக் கல்குளத்துக்
குப்பு சாமி
முகக்கண்க ளிரண்டுகொடு நோக்கியகத் தாய்ந்தச்சில்
முயன்று தந்தான்
சகக்கண்ணிப் புலவனையு முக்கண்ண னெனப்புகழ்ந்து
சாற்ற லாமே.

சென்னைக்கிறிஸ்டியன் காலெஜ்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
பிரமஸ்ரீ
## வி· கோ· சூரியநாராயண சாஸ்திரியாரவர்கள்
சொல்லிய

### பூடுதே வஞ்சி விருத்தம்.

1. சந்தமிக்குறழ் செந்தமிழ்த்திறல் சான்றோளிர்ந்
தந்தகப்பல நூல்கள்கூறிய வண்ணலா
மந்தகக்கவி வீரராகவ னார்செயூர்க்
கந்தனுக்கொரு வண்பிள்ளைக்கவி கண்டனன். (க)

### பூடுதே கலிநிலைத்துறை.

2. அன்ன நூலை யன்பொ டாய்தந் தச்சினி
னன்னர் யாரு மேற்று வப்ப நாட்டினன்
பன்னு கல்வி செல்வ னுற்ற பண்பினன்
மின்னு நம்பி குப்பு சாமி வேளரோ. (உ)

---

பகாவித்துவான் புரசை அட்டாவதானம்
சபாபதி முதலியார் அவர்கள் மாணாக்கரும்
கவர்ன்மெண்டு தமிழ் ட்ரான்ஸ்லேட்டர் முனிஷியுமாகிய
ம-௱-௱-ஸ்ரீ
## தண்டலம்-பாலசுந்தர முதலியாரவர்கள்
சொல்லிய

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

1. அருள்பெறுமான் பார்கன்றி யருந்துபல கறிப்பொருட்கு
மஞ்சு வைச்செய்
பொருள்விளையுஞ் சேயூரிற் பொலிந்திலகு மெழிற்குடிலைப்
பொருளா யோங்கும்

தெருள்வளர்வை நெட்டிலைவேற் செவ்வேளி னிணைக்கமலச்
சேவ டிக்கு
மருவளர்செந் தமிழ்ப்பிள்ளைக் கவியறிஞ ருளத்துவகை
மருவு மாறே. (க)

2. பொன்னகரு மகத்திலிறும் பூதுகொளத் தொண்டையின்
பொன்வி ளைந்த
நன்னகர்பு கழுங்களந்தை நகர்க்கோட்டப் பூதூரி
னண்ணி வாழ்வோன்
பன்னருஞ்சீ ரந்தகனுங் கவிவீர ராகவமால்
பரிந்தி யற்ற
அன்னதனைக் குகரமிசை யமர்ந்திலகும் விளக்குலங்க
ளலர்ந்து மேய. (உ)

3 கற்குளக்கண் மருவுகுளக் கண்ணவன்று ளிணைக்குளக்கண்
கவினு மன்புஞ்
சொற்குளுயர் முத்தமிழோ டாங்கிலஞா னமுமிரம்பத்
துதைந்து ஞாலத்
திற்குளிளம் பூரணரென் றியம்புறு கலாப்பட்ட
மியலுஞ் சைவ
நற்குலவே ளாளனறி வீகையொழுக் கங்களெலா
நண்ணி வாழும். (ங)

4 எத்தரையும் புகழுறுஞ்சீர்க் குப்புசா மிக்குரிசி
லெழுது வோரின்
கைத்தலத்தா லுறும்வழூஉக் களைக்களைந்தே யதன்கணுறுங்
கருப்பொ ருட்கும்
ஒத்தவுரை நயங்காட்டி யெழுதுரு வெழுத்ததனி
லுறுவித் தென்றும்
பத்திநெறிப் பயனடையப் பரிந்துகொடுத் தனனிந்தப்
பாரு ளோர்க்கே. (ச)

திருநெல்வேலி ஜில்லா
சேற்றூர் சமஸ்தான வித்துவான்
ம-ா-ா-ஸ்ரீ

## மு. ரா. அருணாசல கவிராயரவர்கள்

சொல்லிய

### விருத்தக்கலித்துறை.

1. **உ**றவி யந்தக ஆறல்போ லுளத்துளன் பூற
உறவி யந்தக ரூர்செயூர் முருகனுக் குயர்பாப்
பிறவி யந்தக **வீரரா கவன்**சொலப் பெற்றும்
பிறவி யந்தகன் கொள்வரோ கற்றுணர் பெரியோர். (க)

2. **அ**ன்ன பாவனந் தரும்பிள்ளைத் தமிழெனு வாகச்
சொன்ன பாவனந் தருமவன் புகழையான் சொலேனேல்
என்ன பாவனந் தமிழறி யானிவ னென்பீர்
முன்ன பாவனந் தனுஞ்சொல முடியுமோ மொழிமின். (உ)

3. **இ**வைய னைத்துமோர்ந் திரைவெளிப் படுத்துவ மென்று
சிவைய னைத்துதி செயவருள் புரிந்தவன் சினங்கொண்
டவைய னைத்துய ருறப்புடைத் தவனள கத்தாற்
குவைய னைத்துயர் வள்ளிநா யகனருள் கொண்டு. (ங)

4. **நெ**ற்கு ளத்திரண் மணிவிளை தருசெறு நெருங்குங்
**கற்கு ளத்தினன்** னீர்முகந் தெழுபெருங் கனவான்
நற்கு ளத்திரு முனிவர்கள் கலையுணர் நல்லோன்
எற்கு ளத்தினம் பற்பல வுதவிசெய் திடுவோன். (ச)

5. **குப்பு சாமி**யென் றிடுமியற் பெரும்பெயர்க் கொண்டல்
ஒப்பு சாமிய வுறுநரும் புகழ்குண முள்ளோன்
அப்பு சாமிரு **விழியி**னர்க் கங்கச னனையோன்
செப்பு சாமிகண் மூவரின் னருள்பெறீஇச் சிறந்தோன். (ரு)

6. நச்சி யற்றிர ளுருக்கொடு வந்தன நமனர்
உச்சி யற்றிளைப் புறவுதை வீரமா ரொருவன்
மெச்சி யற்றிரு வடியினை யுபாசிக்கு மேலோன்
அச்சி யற்றியா யிரமுறை யளித்தன னன்றே. (சு)

---

பெங்களூர் சென்ட்றல் காலெஜ்
தமிழ்ப்பண்டிதர்
ம-ா-ா-ஸ்ரீ
## தி. கோ. நாராயணசாமி பிள்ளையவர்கள்
சொல்லிய
### நிலைமண்டில ஆசிரியப்பா.

மணிநெடுந் திரைய வார்கடல் வளாகத்
தணிகிகர் பாலி யாரந் துயல்வரு
வளங்குலாந் தொண்டை மண்டலங் குழீஇய
சான்றோர் திலகத் தகையன் சீர்சால்
5. பொன்விளை களந்தைப் பொற்பதி யண்மு
கண்விளை கரும்புஞ் செந்நெலுங் கனலும்
பூதா ரெனப்படும் பொருவறு மாண்பதி
மீதூர் வேளாண் மிளிர்மர புதித்த
வடுக நாத வள்ளல் தவமே
10. படிகொண் டிங்குற் பவித்த பான்மையன்
**வீர ராகவப் பேரா** ளுலாவி
வானக் கண்ணென வண்பொருள் விளக்குவான்
ஞானக் கண்கொடு நவின்முத் தகைய
எண்பொரு ளகத்த வின்றமிழ்க் கடற்கண்
15. மாண்பொருள் யாவும் வகைபெறத் தெரீஇத்

தண்டமி ழெல்லைத் தாரணி வளைந்து
கொண்டல்போற் கவிமழை குளிர்ப்புறச் சொரிந்தோன்
நீர வேணி நெடுந்தகை யளித்த
20. தீயூர் பொறியாற் றிகழ்தரு தேவனுஞ்
சேயூர் முருகன் செவ்விய பிள்ளைத்
தமிழெனும் ப்ரபந்தஞ் சதிருற வருளினன்
அதனையந் நாட்டி லளப்பற வளத்த
முதுநீர்ப் பண்ணை யுதவும் பொருள்சால்
25. கல்குளப் பெயரிய மல்குசீர்ப் பதியான்
**கந்த சாமி** கருதரு தவத்தால்
வந்த சாமி யெனுமதிப் புடையான்
ஆங்கிலஞ் செந்தமி ழாய்ந்த நிபுணன்
பாங்குறு சுகுணன் பழகுறு மன்பினன்
30. மெய்ப்புகழ் சான்ற விவேக சீலன்
**குப்புசாமி** விற்பன சேகரன்
கல்வெட்டு முதலிய கருவிக ளாலறி
கால முதலிய கண்டா ராய்ந்து
எழுத்துச் சொற்பொரு ளியல்புறு கரவமு
அறுத்திங் கெழுதா வெழுத்திற் செறித்து
36. மன்பதை யோர்க்கு வழங்கினன் மாதோ.



மதுரைஜில்லா கொட்டாம்பட்டி
ம-௱-௱-ஸ்ரீ
## எம். கருப்பையாப்பாவலரவர்கள்
சொல்லிய
### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

1. உருத்தொண்டை வளைவிழிக ளுவரிமுலை நகையென்ன
வுரைக்கக் கற்றோர்
கருத்தொண்டை யலரினுயர் கலைமகளே ரவைசான்றோர்
கடங்குஞ் சீர்த்தி
இருத்தொண்டை முன்வசுவா கியதாலிந் நாட்டினுக்கே
யெந்த நாடுந்
திருத்தொண்டை நாடென்ற சிறப்பினு லப்பெயரே
திகழு நாட்டில், (க)

2. சொற்களந்தைத் தியர்மயலாற் சுதையைமறந்திடச்செய்யினுந்
தோற்குஞ் சங்கம்
நற்களந்தை வீகமுறு நறுமேனி குழலென்று
நலிவி லாத
அற்களந்தை வருமடிபஞ் சரிவையர்க்கென் றறையுமெழில்
அதிக மார்ந்த
பொற்களந்தைக் கணித்தான பூதூரே பிறப்பிடமாப்
புகல வாய்ந்தோன். (உ)

3. தாரணியம் புயவரைமா தவன்வடுக நாதமுகி
றவத்தின் றோன்றல்
ஆரணியம் புகப்பஞ்ச வரைவிடுத்தோன் றந்தைவிழி
யமைந்தோன் கல்விச்
சீரணியம் புயலென்னக் கவிவீர ராகவன்பெய்
திடச்சேர் நூலின்
ஈரணியம் பதியாக நிறைந்ததெனி லிவன்பெருமை
நிகழ்த்தற் பாற்றோ. (௩)

4\. திருவாரூர் தனத்தாரூர் திருவாரூர்ப் பரற்கினிய
திருவு லாவும்
கருவாரா விதமன்பர்க் கணித்தருள்கீழ் வேளூரன்
கவியு லாவும்
பொருவாரார் கழுக்குன்றப் புராதனற்கு வழுவின்றிப்
புராண நூலுந்
தருவாரார் கொள்வரெனத் தான்றுருவி னுங்கிடையாத்
தகைமை வாய்ந்து. (௪)

5\. கற்றவரை யேற்றபிரான் கழற்கன்பு மறவாது
கருதக் கல்வி
கற்றவரை யாதரித்துக் கற்பகமுஞ் சினமென்னக்
கலித்துன் பைய
கற்றவரை யின்றியருள் கொடையினரைப் புலப்பகையைக்
கடிந்து முன்னி
கற்றவரைத் தன்னகத்தே கைவிடா துயர்த்திவரு
கவினூர் **செய்யூர்.** (௫)

6\. முருகனுக்கோ ரிலம்பகமாக் **கலம்பக**முஞ் செழுஞ்சுவைகண்
முதிருஞ் செஞ்சொல்
தருகவினுங் கற்பனையு மணிநயமும் பொலிந்துகற்றோர்
தங்க ளுள்ளம்
உருகமுத வித்தமிழென் றுரைத்திடப்**பிள் ளைத்தமிழு**
முரைத்தா னின்னும்
பெருகவுசுற் றியநூல்கள் பலவுலகிற் டனையோலைப்
பிரதி யாக. (௬)

7\. இருந்தவந்த நூல்களில்யாப் பியைந்தபிள்ளைத் தமிழிரத
மென்ன வாய்ந்துந்
திருந்தவந்த வச்சின்றி வையமிசை நடைபெறாத்
திறத்தை யோர்ந்து

தருந்தவந்தன் னுடையதெனக் கணித்துயர்ந்த வச்சிட்டுத்
தால மெல்லாம்
பொருந்தவந்த னம்புரிந்து புகழவுலாப் போந்துவரப்
புரிந்தான் யாரேல். (எ)

வேறு.

8. சந்தவன மாகிபுரி பாலபதி யழகார்
தாமரைப் பதிகுளந் தாபுரி யெனமி
குந்தவன நாமமைந் தொடுமெதன் முயலின்
கூடுதரு மன்பதஞ் சவிமழ முனிவன்
தந்தவன முற்றவருள் காமீச ரடியிற்
றவமருச் சனைபூசை தனிசெய்த தவனுய்க்
கந்தவன சங்களன முறவளர்தல் வெளிய
கலைமகளைக் காட்டுமெழிற் கல்தூளநகரம்வாழ். (அ)

வேறு.

9. கள்ளலையா வொழுகுமுலைக் கண்ணிபுனை யம்புயத்தான்
கவிஞோர் நெஞ்சம்
உள்ளலையா வலிற்றீர்க்கு முவகையுள முறஞேக்கி
யுனுழு வேழு
வள்ளலையார் கண்டவரன் ஞுருருவே யோருருவாய்
வந்தோ னென்ன
விள்ளலையார் துயர்கந்த சாமிதரு கான்முளையா
மேன்மைக் கொண்டல். (கூ)

10. புத்தகவா ராய்ச்சியையே பொருளெனக்கொண் டெஞ்ஞான்
புரப்போன் மிக்க [றும்
வித்தகவாய் மையிற்சிறிதும் விலகாதான் கண்ணோட்ட
மேய கண்ணன்
மத்தகவா ரணமுகனை மயிலவனைக் கனவினிலு
மறவா னுற்றேற்
குத்தகவாக் கிடைத்தநண்பன் குப்புசா மிக்கீர்த்திக்
கோமான் மாதோ.

"அத்துவித சித்தாந்த மதோத்தாரணரும்
மாயாவாத தும்சகோளரியுமாகிய"
யாழ்ப்பாணம் - மேலைப்புலோலி
ம-ா-ா-ஸ்ரீ

## நா. கதிரைவேற் பிள்ளையவர்கள்

சொல்லிய

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

1. பொன்னமரு மணிமார்பப் புத்தேளுந் தேறரிய
 பொருவி ருனு
 முன்னமரு மோரெழுத்தின் பொருள்கேட்ப விரித்துரைத்த
 முதல்வ னெற்கு
 முன்னவருந் திருவருளை யளித்தருள்சே யூர்ச்சேய்க்கு
 முன்னர்ப் பாவா
 னென்னவரும் வியக்கவொரு முளைத்தமிழைப் பூதூரி
 னெழிலாய் வந்தோன். (க)

2. கண்ணெனெண் கண்ணனு மற்றையபல் கண்ணருங்
 காணுக் காதற்
 பண்ணருந் தென்றமிழின் பரப்பெல்லா மகக்கண்ணாற்
 பார்த்து மேலா
 மெண்ணருங் கவிச்சிங்கக் கவிவீர ராகவனிங்
 கியற்ற வத்தை
 விண்ணரு மண்ணரும் புகழ்ந்திடவாய்ந் தளித்திட்டான்
 வியனின் மாதோ. (உ)

3. அன்னவன்யா ரெனிற்கேண்மின் பல்குளமுங் கற்குளமா
 வலர்ந்த மேலோர்
 மன்னுபெருங் கற்குளத்துப் பழிப்படாத் தொழிற்குலத்தின்
 வந்த சீர்த்தி

யின்னினிய குணக்கந்த சாமிதவத் தீன்றருளு
மினியான் கல்வி
மின்னொளிரு நலக்குப்பு சாமியெனு நூலளிக்கு
மெய்யோன் மன்னே. (௬)

---

திருமாகறல்
ம-ா-ா-ஸ்ரீ
## வித்துவான் - கார்த்திகேய முதலியாரவர்கள்
சொல்லிய
### நேரிசைவெண்பா.

1. கல்விநிதி பூதூர்க் கவிவீர ராகவன்முன்
சொல்விழியி ராதிருந்துந் தூயதமிழ்—நல்விழியாற்
பெற்றிதிகழ் சேயூரன் பிள்ளைத் தமிழ்கண்டு
மற்றெவர்க்கு மீந்தான் மகிழ்ந்து. (௧)

### கட்டளைக் கலித்துறை.

2. பான்முதிர் முல்லையு மெல்லே விரும்பும் பயன்கொள் செய்கை
வேன்முதற் செல்வன் முருகன் பிள்ளைத்தமிழ் மேதினியிற்
றேன்முதிர் கல்குளத் தெங்குப்பு சாமி திறமையினாற்
கான்முதல் பெற்றே யுலாவரக் கற்றதெங் கண்முன்னரே. (௨)

---

திருநெல்வேலி

ம-ா-ா-ஸ்ரீ

## எஸ். அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள்,

## எம். ஏ, எல். டி.

சொல்லிய

### பஃறொடை வெண்பா.

1. முத்தமலி சேயூர் முருகன்றன் பொன்னடிக்கே
பத்திகொடு சாதிநன் பண்பிற்பிள் ளைத்தமிழென்
றெத்திசையும் வீசுமண மேந்து மெழின்மாலை
கத்தனவன் றொண்டன் கவிவீர ராகவன்
முத்தியினுக் கூறு முதிர்பொருள்கள் நோக்காமை
பொத்தியகண் பெற்றவனென் போன். (க)

### நேரிசைவெண்பா.

2. அத்தகைய நூலினை யச்சிலிட் டீந்தோனை
யெத்தகைய னென்னி வியம்புவேன்—மெய்த்தமிழிற்
சத்தாதி கற்றகுப்பு சாமியுயர் வேளாளன்
வத்தாதி தேரும் வரன். (உ)

# பொருளடக்கம்.

# முகவுரை.



பிள்ளைத்தமிழ் தமிழிலுள்ள தொண்ணூற்றாறு பிரபந்த வகைகளில் ஒன்று. அது ஆண்பாற் பிள்ளைத் தமிழென்றும் பெண்பாற் பிள்ளைத் தமிழென்றும் இருவகைத்து.

* "சாற்றரிய காப்புச்செங் கீரைதால் சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை—போற்றரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து."

என்பதற்கிணங்கக் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் இவற்றை முறையே அகவல் விருத்தத்தினாற் கூறுவது ஆண்பாற் பிள்ளைக்கவி. இவற்றுட் பின்கூறிய சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் இவைகளை யொழித்து, கழங்கு, அம்மானை, ஊசல் என்பவற்றைச் சேர்த்துக் கூறுவது பெண்பாற் பிள்ளைக்கவி. இம்மூன்றினையும் அடியோடு நீக்கி, முதலேழு பருவத்தை மாத்திரம் பெண்பாற் பிள்ளைக் கவிக்குக் கொள்ளுவாரு முளர். அதற்கிலக்கணம்:—

† "முறைதருவான் முதிரு வேழிருந் தியங்கன்
அறைகழலம் பத்துடன் சேர்ந்திடும்—இறைவனையார்க்

* வெண்பாப் பாட்டியல்; "சாற்றரிய காப்புச்சால செங்கீரை" எனவும் பாடம்.

† வெண்பாப் பாட்டியல், செய்யுள்-7.

திருவுத்தரகோசமங்கை மங்களேசுவரி பிள்ளைத்தமிழ் முதலிய பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களினாலும் எளிதில் அறியக்கூடியன.

இச்சேயூர்க் கந்தர் பிள்ளைத்தமிழ் பலவிஷயங்களில் மற்ற ஆண்பாற்பிள்ளைக் கவிகளைப் போன்றிருந்தும் காப்புப் பருவத்திற் கூறிய துதிகளைக் கவனிக்கும்போது மற்றெவற்றினும் சிறப்புற்றிருக்கிறதாகக் காணப்படும். இதனைப்பாடியோர் பொற்களந்தை அந்தகக்கவி வீரராகவமுதலியார். சேயூர் என்ற பதத்திற்கு முருகனுடைய ஊர் என்பது பொருள். காரணப்பெயராயிருந்து பிறகு காரண இடுகுறியாய் அவ்வூரைமாத்திரம் உணர்த்தி நிற்றலின் "சேயூர்க் கந்தர்", "சேயூர்முருகன்", என்பனவற்றில் இரண்டாவது மொழி கூறியது கூறல் என்னும் குற்றத்திற் கிலக்காகாது. இந்நூலிற்குச் சேயூர்க்கந்தர் பிள்ளைத்தமிழ், சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், சேயூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ், என்று மூன்று பெயரிருப்பினும் வழக்காற்றை நோக்கும்போது முதற்பெயர்தான் முதலில் ஆசிரியர் கொடுத்திருந்திருக்கவேண்டும் என்று புலப்படுகிறது.

இவ்வூர்க்குச் **சேயூர்** என்றும், **செய்கையம்பதி** என்றும் * **வளவநகர்** என்றும் பெயர். வளவநகர் என்பதற்குச் சோழனுடைய நகரமென்பது பொருள். அவ்வூர் வேளாளர்க்குத் தொண்டைமண்டல வேளாளரென்றும் தொண்டைகட்டி வேளாளரென்றும் பெயர். கி. பி. பதினோராம் நூற்றாண்டின் இறுதியிலும் பன்னிரண்டாவது நூற்றாண்டின்

* "வளவநகரின் வடதெருவின் முருகனைக் காக்கவே" — பக்கம் 4, வரி 19.

முதலிலும், அதாவது சுமார் 800 வருஷங்கட்கு முன்பு அர
சாண்ட *குலோத்துங்கசோழன் புத்திரனாகிய ஆதொண்டைச்
சக்கிரவர்த்தி சோழமண்டலத்தைவிட்டுக் காஞ்சி மண்டலத்
தைப்பெற்று அக்காலத்துச் செங்கற்பட்டு(செங்கழுநீர்ப்பேட்
டை)க் கருகிருந்த அடங்கா முடிகளாகிய குறும்பர்களை ஜெ
யித்து எதிர்த்துநின்றவரைத் தொலைத்துத் தன்னுடன் கொ
ணர்ந்த வேளாளரைப் பற்பல இடங்களிலும் குடியேற்றி
னன்† என்பது ஒரு கொள்கை. இதற்குப் பிறகுதான் இவ்
வேளாளர்க்குத் தொண்டை மண்டல வேளாளர் என்னும்
பெயர் வழங்கிவந்தது. சைவசமயாசாரியர்களாய திருஞான
சம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு (அப்பர்) நாயனார்
இவர்கள் காலத்தில் செழிப்புற்றிருந்த சமணமதம் இவர்களு
டைய முயற்சியினால் குறைதிசையடைந்ததாகவும் தெரிய
வருகிறது. இவர்களிருந்தகாலம் கி. பி. 7-வது நூற்று
ண்டு (அதாவது சுமார் 1250 வருஷங்களுக்குமுன்) என்று
§ நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அக்காலத்திலும் சேயூரில்
வேளாளரிருந்தனர் என்பதும் அவர்களிற்சிலர் சோழ
ராஜனுக்குப் பிரதிநிதியாயிருந்து சேயூர்க் கோட்டத்
தையும் மற்றும் பல கோட்டங்களையும் ஆண்டு வந்தனர்
என்பதும், சமணருடைய காலத்தில், காலத்திற்கேற்பத்
தாங்களும் அம்மதத்தை அநுசரித்துத் திருநாவுக்கரசு நாய
னார் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் இவர்கள் காலத்தில்

---

* Kulottunga Chola Deva I (1070 A. D. to 1118) See South Indian Inscriptions, Vol. II. Part ii, page 153.

† Chingleput District Manual, Page 88.

§ Madras Christian College Magazine, January 1896, page, 396. The History of Southern India before the Eleventh Century A. D. by Mr.V. Venkayya M.A., cf (Pulikesin II,609-642 A.D.)

அம்மதம் க்ஷீணதிசை அடைந்தபோது அவ்வூர் வேளாளர்களும் தங்கள் புது மதத்தைவிட்டுத் தங்கட்குரிய சைவ மதத்தையே திரும்பவுங் கைக்கொண்டனர் என்பதும் மற்றொரு கொள்கை. அக்காலத்தில் இவர்கட்குக் கொண்டைகட்டி வேளாளர் என்பது பெயர். இப்பெயர்க்குரிய காரணம் சரியாய்ப் புலப்படவில்லை. இவர்கள் சோழ அரசர் வமிசத்தைச் சார்ந்தவர்க ளென்பது, “வளவதிரையர்” என்னும் இவர்களுடைய கோத்திரப் பெயரால் நன்கு விளங்கும்.

“சேயூர்” என்னும் பதத்தால், அவ்வூர் முருகக் கடவுள திருப்பிடம் என்றும், கடவுளால் அவ்வூர்க்குப் பெயரேயன்றி ஊரினால் கடவுட்குப்பெயர் வந்ததன்று என்றும், புதிதாய் ஊர் உண்டாக்கியபோது முருகக்கடவுள் கோயில் இருக்கக் கண்டு அவ்வூர்க்குச் சேயூர் எனப் பெயரிட்டிருக்க வேண்டுமென்றும் தோற்றுகிறது. ஒருவேளை சோழவம்சத் தரசர்களால் ஊர் உண்டாக்கப்பட்டிருக்கலாம். * “வளவ நகர்” என்பது இக்கொள்கையை வலியுறுத்துகின்றது. ஆதியில் நன்னிலையிலிருந்த ஆலயம் காலக் கொடுமையினால் நிலை தளர்ந்துபோகவே பிற்காலத்தார் அதை ஜீர்ணோத்தாரணம் செய்துவைத்ததாகவும் தெரியவருகிறது.

“வைவத் துரந்தாடு முரகக்கு லேசன்மகன்
மகனுக்கு மொருதொண்டைமான்
வாரிதித் திரைநல்கு மன்னன் பெரும்பேர்
வரம்பெற்ற வொற்றிகொண்டான்
சைவத் தவப்பயனை யொத்தவன் வழிவந்த
தநயன் கழுக்குன்றனுங்

* சோழனுடைய நகர்.

தக்க செம்பிய வளவன் வந்துணக் காலயம்
சகலமுந் தந்ததற்பின்
பௌவத் தலத்தெழு சகாத்தமோ ராயிரத்
தொருநாலு நூற்றின்மேலும்
பயிலுநாற் பத்துமூ வருடமாம் விடுவருட
மகரம் பகுத்ததிருநாள்
தெய்வத் திருத்தே ருருட்டியது போலவிச்
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய் சரவணப் பொய்கையாய் தோகையாய்
சிறுதே ருருட்டியருளே"

என்ற சிறுதேர்ப்பருவத்து* ஆறுவதுசெய்யுளினால், தொண்டைமான் வமிசத்தைச்சார்ந்த சைவ சிரோமணியாகிய† **ஒற்றி கோண்டான்** என்பவருடைய தநயனாகிய **கழுக்குன்றன்** என்பவர் அவ்வூர்ச் சுப்பிரமணியர் ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்தாரெனவும் அப்போது முதற்றிருவிழா (1443 சகம் = 1443 + 78 = 1521-கி. பி., அதாவது 380 வருஷங்களுக்கு முன்பு) ‡ விஷு (ஆறு) தைமீ ஆரம்பிக்கப்பட்டு நடந்த தெனவும் தெரியவருகின்றது.

இவ்வாலய உற்சவங்களிற்சில செவ்வனே நிறைவேறும் பொருட்டுக் காஞ்சீபுரம் முதலிய நகரங்களிலிருந்த **செங்குந்த மரபினர்** சில மானியங்களும் கட்டளைகளும் ஏற்படுத்தி

---

* 76-ம் பக்கத்திற்காண்க.

† "வெற்றி கொண்டான்" எனவும் பெயர். இப் பெயர்கள் சிதைவுற்று இக்காலத்தில் 'ஒத்தி கொண்டான்', 'கழுக்குண்டான்' என்றாயின. அவ்வூர் உப்பளத்திற் சில பாகத்திற்கு இப்பெயர்கள் இப்போதும் வழங்கிவருகின்றன.

‡ இதன் விவரங்கள் 76-ம் பக்கத்திறுதியிற் காண்க.

யிருக்கிறதாக அக்கோயிலிலுள்ள ஒரு தாமிர சாசனத்தால் தெரியவருகின்றது. கலி 4755, சாலிவாகன சகம் 1576 (1554?) க்குச்சரியான கி. பி. 1653ஸ்ரீ (அதாவது 248 வருஷத்திற்குமுன்) விஜயஸ்ரீ சித்திரைமீ, பூர்வபக்ஷம், துவாதசி, அஸ்தம், சுக்கிரவாரதினம், இந்தத் தாமிரசாசனம் ஏற்பட்டது. இது அக்காலத்து தருமகர்த்தாவாயிருந்த *கழுக்குன்றமுதலியாருடைய பிரயத்தினத்தினுலுண்டான தாகவும் தெரியவருகிறது.

இம் முருகக் கடவுள்மேரில் அந்தகக்கவி வீரராகவ முதலியார் இப் பிள்ளைத்தமிழும், கலம்பகம் ஒன்றும் பாடியுளர். இப் பிள்ளைத்தமிழ் அரங்கேற்றிய காலத்து அவ்வூரில் கல்விச் செல்வத்திலும் பொருட் செல்வத்திலும் பிரசித்தி பெற்றிருந்த விஷ்டினர் அம்மையப்ப முதலியார் என்பவர், "வடதெரு முருகனைக் காக்கவே" என்று காப்புப்பருவத்துக் கங்காதேவி துதியில் கவிராயர் பாடியிருப்பதைக் கேட்டு, அதனுல் வடக்குத்தெரு சிறந்துவிட்டதென்றும், தாமிருந்த தெற்குத்தெருவின் புகழ் குறைந்ததென்றுங்கொண்டு கவிராயர்மீது சினங்கொண்டு தம்முடன் வந்தவரையும் உடன் கொண்டு அரங்கத்தை விட்டெழவே, கவிராயர் அவரது கோபத்தை ஆற்றிப் பிறகு அவரைத் திருப்பிசெய்யும்வண்ணம் அவர்மீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடியதாகவும் தெரிய

---

* [See line 117, copper plate grant referred to above] இவர் (1653—1521=132) முதற்றிருவிழா ஏற்படுத்திய 'கழுக்குன்றன்' என்பவர்க்கு 132 வருஷத்திற்குப் பின்னிருந்தவராதலின் இவ்விரு பெயரும் ஒருவரையே குறித்ததன்று என்பதும் ஒருவேளை முன்னவருடைய சந்ததியாரா யிருந்திருக்கலாமென்பதும் உத்தேசிக்கலாம்.

வருகிறது. அதற்கு *"விட்டினர் அம்மையப்பன் பிள்ளைத் தமிழ்" என்று பெயர்.

கவிராஜப்பிள்ளை யென்பவரொருவர் கந்தர்மீது ஒருலாப் பிரபந்தம் இயற்றியுள்ளார். இதுமுன்னிரண்டிற்கும் முந்திய தென்பதும், மிக்க சிறப்புடைத் தென்பதும் இப் பிள்ளைத் தமிழ் நூலாசிரிய ராலேயே தெரியவருகிறது. §

சென்ற சில்லாண்டுகட்குமுன் காலஞ்சென்ற திருப்புகழ்ச்சுவாமியென்றும், முருகதாச சுவாமியென்றும், தண்டபாணி சுவாமியென்றும் பேர்பெற்றிருந்த ஒருவர் "சேயூர்க்கந்தர் திருப்புகழ்" என்னு நூலொன் றியற்றியதாகவும் தெரியவருகிறது.

இப்பிள்ளைத்தமிழினை அச்சிடும்போது எமது நண்பர்களாய ம-ா-ா-ஸ்ரீ திரு. த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள், பி.ஏ., எஸ். அநவரத விநாயகம்பிள்ளை யவர்கள், எம். ஏ., யாழ்ப்பாணம். கதிரைவேற்பிள்ளை யவர்கள், ஆகிய இவர்கள், உடனின்றுதவியது ஒருகாலும் மறக்கத்தக்கதன்று.

இது இனிது முடியுமாறு தோன்றாத்துணையா யுதவி புரிந்துநின்ற எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளை மனமொழி மெய்களிற் றொழுகின்றனம்.

---

* அது ஒவ்வொரு பருவத்திற்கு அவ்வைந்தாக ஐம்பது பாக்கள் அடங்கியுள்ள நூல். அந்நூலில் (காப்புப்பருவம்) அவரை "வளவரதிபதி" யென்றும், "நயினமகிபதி" யென்றும் "திரசையரரசு" என்றும், (செங்கீரைப்பருவம்) அவர் "பதினெட்டு வட்டத்திற் கதிபதி" யாயினரென்றும், (முத்தப் பருவம்) "தொண்டைவள நாட"னென்றும், (வருகைப் பருவம்) "செய்கை நகராதிபதி" எனவும், "வீரராஜேந்த்ர சோழவளவேசஞ மேகவீரன்தந்த சத்த வடிவாள் வீரன்" எனவும் "சோழ வளவக்குலேசன்" எனவும், (அம்புலிப் பருவம்) "தொண்டீர தேச"னெனவும், குறிக்கப்பட்டுள்ளது.

§ 55-ம் பக்கம் 6-வது வரியிற் காண்க.

# நூலாசிரியர் வரலாறு.

---

இந் நூலாசிரியராகிய அந்தகக்கவி வீரராகவ முதலியாரென்பவர், செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள பொன்விளைந்த களத்தூர் (பொற் களந்தை)க்கருகிலுள்ள பூதூரிலிருந்த வடுகநாத முதலியார்க்குப் புத்திரரா யுதித்தனர். இவர் பூர்வ கன்மத்தின்பலனாற் பிறவிக்குருடராயிருந்தும் கல்வியில் ஆதிசேடனையும் அகத்தியனையும் போன்று பிரசித்தி பெற்றவராயினர். இவர்காலத்தில் இவர் குடும்பத்தார் பூதூர் நீங்கிப் பொற்களந்தை குடிபுக்கனர். இவர் காஞ்சீபுரஞ்சென்று கல்வி பயின்றனர் என்பதும் பிறகு கல்வியிற்சிறந்து விளங்கினர் என்பதும் "தமிழ் நாவலர் சரிதை"* யிலுள்ள பின்வரும் அடிகளாற் றெரியவரும்.

"கவிவீரராகவன் காஞ்சிபுரத்தில் படித்தபோது கந்தபுராணங் † கச்சியப்பர் பாடியது:—

'போங்குதமி ழயோத்தியில்வாழ் தசரதனென் போனிடத்தும்
பூதூர் வேந்தன்

---

* இது ஏட்டுப்பிரதியிலுள்ளது, இன்னும் அச்சிடப்படவில்லை. ம-ா-ா-ஸ்ரீ திரு. த. கனகசுந்தரம் பிள்ளை யவர்களிடமுள்ள பிரதியினின்று சில செய்யுட்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

†இவர் கந்தபுராண நூலாசிரியராய கச்சியப்ப சிவாசாரியசுவாமிகளாயிருந்தாலு மிருக்கலாம். கந்தபுராணத்திற் றோய்ந்த வேறொருவராயிருந்தாலு மிருக்கலாம். முன்னையோரெனச் சொல்லின் முரணுவார் சிலருளர்.

துங்கவடு கன்னிடத்தும் வீரராக வரிருவர்
தோன்றி னூரால்
அங்கொருவ னொரு † கலைமா னெய்திடப்போய் வசைபெற்று
னவனி பாலன்
இங்கொருவன் ‡ பல் கலைமா னெய்திடப்போய்க் கவியினு
லிசைபெற் றூனே.''

"ஏடாயி ரங்கோடி § யெழுதாது தன்மனத்
தெழுதிப் படித்த விரகன்
இமசேது பரியந்த மெதிரிலாக் கவிவீர
ராகவன் விடுக்கு மோலை
சேடாதி பன்சிர மசைத்திடும் புகழ்பெற்ற
திரிபதகை குலசே கரன்
தென்பாலை சேலம் புரந்துதா கந்தீர்த்த
செழியனெதிர் கொண்டு காண்க
||பாடாத கந்தருவ மெறியாத கந்துகம்
பற்றிக் கொலாத கோணம்
பறவாத கொக்கனற் பண்ணுத கோடைவெம்

---

* (1) ஸ்ரீ இராமபிரான் (2) அந்தகக்கவி வீரராகவன்.

† கலைமான்=மாரீசனுகிய மாயமான்.

‡ பல்கலைமான்=சரஸ்வதி (கல்வி).

§ 'ஏடாயிரங்கோடி **எழுதுவன் றன்மனத்** தெழுதிப்படித்த விரகன்' எனவும் பாடம்.

|| கந்தருவம்=இசை; குதிரை. கந்துகம்=பந்து; குதிரை., கோணம்=வளைந்தவாள்; குதிரை. கொக்கு=ஒருபறவை; குதிரை. கோடை=வேனிற்காலம் ; குதிரை. குந்தம்=சூலம் ; குதிரை. பாடலம்=பாதிரிப்பூ; குதிரை. மா=மாமரம்; குதிரை. சடிலம்=சடை; குதிரை. கிள்ளை=கிளி; குதிரை. இப்பதங்கட்கு இங்குரைத்த இருபொருள் உளவேனும் தத்தம் அடைமொழியால் முன்னைய பொருள் நீங்கப்பின்னைய தாகிய குதிரை யென்னும் ஒன்றனையே குறித்து நின்ற தென்க.

> படையிற் † றொடாத குந்தம்
> சூடாத பாடலம் பூவாத மாவொடு
> தொடுத்து முடியாத சடிலம்
> சொன்னசொற் சொல்லாத கிள்ளை யொன்றெங்குந்
> துதிக்க வாயிடல் வேண்டுமே.''

இச்சீட்டுக் கவியின் புதுமையினால் இவர் கல்வி கற்ற அருமை இவ்வளவினதென்பது ஒருவாறு தெரியவரும். காஞ்சீபுரத்தில் கல்விகற்றுப் பிறகு தன்னூராகிய பொற்களந்தை நகர் போந்து தன்மனைவியோடு வாழுநாட்களில் ஒருநாள் தாம் வெளிச்சென்று திரும்பிவருவதை அருகிருந்தவர்களி லொருவர் அவர்தம் மனைவிக்குத் தெரிவிக்க, அவள் இவரது பெருமையைக் குறியாது அங்கவீனமாகிய சிறுமையைக் குறித்து 'இவர் விகடத்திருமேனியிலே யானைக்கன்றும வளநாடும் பெற்று வந்தனரோ!' என்று மிக்க அலக்ஷியமாய்ச் சொல்ல, அதனைச் செவியுற்ற நம்புலவர்,

> "அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
> கிவ்வுலக மில்லாகி யாங்கு"

என்பதை மனத்திற் கொண்டு, மனைவியிகழ்ந்ததன் காரண மறிந்து உடனே பொருள் தேடு நிமித்தம் வீட்டைவிட்டுப் புறப்பட்டு ஒரு சிஷ்யனைத் தன்னுடன்கொண்டு தேசயாத்திரை சென்றனர். இதற்கிடையிற் பல சிறு நூல்களையும் பெரு நூல்களையும் விடுகவிகளையு மியற்றினர்.

அவ்வாறு போய்ப்போது ஒருநாள் கவிராயர் தம் சீடனுடன் ஒரு குளக்கரையில் தங்கியிளைப்பாறிக் கொண்டிருக்கையில் அவர் கொண்டுவந்த கட்டமுதை நாய் தூக்கிக்

† 'படையாய்த் தொடாத குந்தம்' எனவும் பாடம்.

கொண்டு போய்விட்டது. அப்போது அவர் பாடிய செய்யுள் :—

*“ சீராடை யற்ற வயிரவன் வாகனஞ் சேரவந்து
பாராரு நான்முகன் வாகனந் தன்னைமுன் பற்றிக்கௌவி
நாரா யணனுயர் வாகன மாயிற்று நம்மைமுகம்
பாரான்மை வாகனன் வந்தே வயிற்றினிற் பற்றினனே.”

அவர் பிறகுமேற்சென்று சோழநாட்டையடைந்து அங்குச்சில நாளிருந்து அதன்பிறகு ஈழநாட்டிற்குச் சென்றனர். அதன் வடபாகத்தை அக்காலத்தில் **பரராசசிங்கம்** என்னுந் தமிழரசன் ஆண்டுகொண்டிருந்தான். அவ்விடஞ்சென்று அவர் அரசனுடைய பேட்டிக்குப் பலநாள்காத்திருந்தார். அப்படிக் காத்திருந்தும்அரசனைக்காணும் சமயம் சீக்கிரத்தில்வாய்க்கவில்லை. அரசனைத் தவிர மற்றெல்லோரும் நாளடைவில் கவிராயருடைய கல்வித்திறத்தினையும் யாழ்வாசிக்கும் திறத்தினையுங்கண்டு களித்தனர். ஆயினும் அரசன் சபையிலுள்ள வித்துவான்களும், பாவலரும், நாவலரும் அவருடைய வரவை அரசற்குத் தெரிவித்திலர். அவர் பலநாளாக அரசனுடைய பேட்டி தேடிவந் திருக்கின்றனர் என்பதும், யாழ்வாசிப்பதில் மிக்க திறமையுடையரென்பதுமொருநாளறிந்த அரசன்மனைவி அரசன்மீது கோபங்கொண்டு அன்றிரவு அவன் பள்ளியறைக்கு வந்தபோது வழக்கப்பிரகாரமிராது கடுகடுத்த முகத்துடன் ஒதுங்கி நின்றனள். இக்கோபத்திற்குக் காரணம் இன்னதென அறிகிலாது அரசன் அவள் கோபத்தை ஆற்றவுமன்றும் முடியவில்லை. மறு

*வயிரவன் வாகனம்=நாய். நான்முகன் வாகனம்=அன்னம். நாராயணன் வாகனம்=கருடன் (பருந்து). மைவாகனன்=ஆட்டுக்கடாவை வாகனமாக உள்ளவன்=அக்கினி.

நாட்காலையில் அரசனது சிங்காரவனத்தி லிருந்த ஒரு மரப் பொந்தில் கிளி ஒன்று வெளியே வருவதும் பயந்து உள்ளேபோவதும் மறுபடியும் வெளியேவருவதும் உள்ளே போவதுமாயிருந்தது. இதையுற்று நோக்கிக் கொண்டிருந்த அரசற்கு இதன் காரணம் இன்னதெனப் புலப்படவில்லை. முன்னரே மனைவியின் கோபத்திற்குக் காரணமும் இன்னதெனத் தோன்றவில்லை. அதனால் அரசனுக்கு மனக் கவலை அதிகமாய் விட்டது. அரசன் கொலுமண்டபத்திற்கு வந்தவுடன் அவ்விடத்துள்ள புலவர்களை நோக்கி, "என் மனத்துள கவலை யின்னதெனவும் அதற்குக்காரணம் யாதெனவுங் கண்டு உரைமின்" என்னலும், 'கண்டசுத்தி' பாடும் புலவர்களும் ஒன்றுந்தோன்றாது விழித்தார்கள். அவர்கள் விழித்தும் விழிக்குத் திக்குகள் எட்டும் போதாவாயின. அவர்களில் ஒருவர் அரசனுடைய மனக்கவலையை எப்படியாயினும் நீக்கவேண்டுமென்னும் எண்ணங்கொண்டு அந்தகக் கவிவீரராகவ முதலியாருடைய ஆற்றலையும் குணத்தையும் அரசற்கு எடுத்துரைத்து அவர் அதன் காரணத்தை உரைக்கவல்லவர் எனலும் அரசன் அவரை வரும்படி உத்தரவுசெய்தான். அவர்வந்தபோது அவர் அந்தகராயிருந்தலால் இராஜபார்வைக்குரியரல்லர் என்னுங் காரணம்பற்றி ராஜசபையில் குறுக்கே ஒருதிரைபோடப்பட்டிருந்தது. கவிராயரும் வந்த கற்றார்சொல்லி தானுமவரும் கொலு மண்டபத்தை அணுகினவுடன் குறுக்கேயிருந்த திரையைக் கண்டு, †"திருச்சிற்றம்பலம்" என்னலே, குறிப்பறிந்த குர

† 'சிவசிதம்பரம்' என்றான் எனவும், அவர் 'அது அண்ணாமலை யாகாதோ' என்றார் எனவும், உடனே திரை அக்கினிக்கிரையாயதெனவும் சொல்வர் சிலர்.

வர் "முத்துத்திரை இற்றுவிழு" என்றனர். உடனே திரை அறுந்துவிழுந்தது. அதைக் கண்டோர் அச்சமும் பக்தியும் பெருகி அவரை அரசற்கு அருகேகொண்டு போய் ஓரிருக்கையில் உட்காரவைத்து உபசரித்தனர். பிறகு அவரை இன்னும் பரீக்ஷிக்கவேண்டி அரசனுடைய கையில் ஒரு வில்லு மம்புங் கொடுத்து, 'அரசனுடைய கோலம் எம்மாதிரியானது?' என்று மந்திரிமார் கேட்க, அவர்,

*" வாழு மிலங்கைக்கோ மானில்லை மானில்லை
ஏழு மராமரமோ விங்கில்லை—ஆழி
அலையடைத்த செங்கை யபிராமா வின்று
சிலையெடுத்த வாறெமக்குச் செப்பு"

என்று சொல்லிப் புத்திசாதுரியமாக அரசன் கோலத்தைப் போர்க்கோலமாக்கி உத்பிரேக்ஷித்துக் காட்டினர். பிறகு அவரை வருவித்ததின் காரணத்தைத் தெரிவிக்க, அவர் அரசனுடைய உட்கருத்தையும் அதன்காரணத்தையுமறிந்து பாடியசெய்யுள் :—

†" வடவைக் கனலைப் பிழிந்துகொண்டு
மற்று மொருகால் வடித்தெடுத்து
வாடைத் துருத்தி வைத்தூதி
மறுகக் காய்ச்சிக் குழம்புசெய்து
புடவிக் கயவர் தமைப்பாடிப்
பரிசு பெறுமற் றிரும்பிவரும்

---

* 'இலங்கைக்கரசனுகிய இராவணன் இப்போதோ இவ்விலங்கையில் இல்லை. மாரீசனுகிய மானுமில்லை. ஏழுமராமரமும் இவ்விடத்தில்லை. சேது பந்தனஞ்செய்த ஸ்ரீ ராமனைப்போன்று விளங்கும் ஏ! அபிராமா! கையில் வில்லுங் கணையுங் கொண்ட காரணம் யாது ?' என்பது இதன் பொருள்.

† (1) மனைவி சினங்கொண்டதற்குக் காரணம் கவிராயர்க்கு அரசன் பேட்டி கொடாதிருந்தது.

புலவர் மனம்போற் சுடுநெருப்பைப்
புழுகென் றிறைத்தாற் பொறுப்பாளோ
†அடவிக் கதலிப் பசுங்குருத்தை
நச்சுக் குழலென் றஞ்சியஞ்சி
அஞ்சொற் கிளிகள் பஞ்சரம்விட்
டகலா துறையு மகளங்கா
திடமுக் கடவா ரணமுகைத்த
தேவே தேவ சிங்கமே
திக்கு விஜயஞ் செலுத்திவரும்
செங்கோ னடாத்து மெங்கோவே."

அரசன் தானினைத்திருந்த இரண்டு விஷயங்களும் அதற்குத் தக்க காரணங்களும் இப்பாட்டாற் புலப்படப்பெற்றுக் கவி ராயர்க்குப் பற்பல பரிசளித்தனன். அவற்றில் யானைக்கன் றும் பொற்பந்தமும் முக்கியமானவை. அவர் தாம் பொற்பந் தம் பெற்றபோது பாடிய வெண்பா :—

" **போங்**குமிடி யன்பந்தம் போயதே யென்கவிதைக்
கெங்கும் விருதுபந்த மேற்றதே—குங்குமந்தோய்
வெற்பந்த மானபுய வீரபர ராசசிங்கம்
பொற்பந்த மின்றளித்த போது."

யானை பெற்றதற்குப் பாடிய விருத்தம் :—

" **இ**ல்லென்னுஞ் சொல்லறியாத சீமையில்
வாழுதானைப்போய் யாழ்ப்பாணன் யான்
பல்லைவிரித் திரந்தக்கால் வெண் சோறும்
பழந்தூசும் பாலியாமற்

† (2) கிளிவெளியே செல்லாததற்குக் காரணம் காற்றிலைசை யும் வாழைக் குருத்தை நச்சுக்குழலென்று பயப்பட்டிருந்தது.

கொல்லவினைந்தே தனது * நால்வாயைப்
  பரிசென்று கொடுத்தான் பார்க்குள்
தொல்லையென †தொருவாய்க்கும் நால்வாய்க்கு
  மிரையெங்கே துரப்புவனே.''

இவ்வாறு சொன்னபோது அரசன் அவ்யானைக் கன்று வளருமபடியான நாடுங்கொடுத்தான். பிறகு சிலகாலம் அவர் அந்த அரசனிடத்திருந்தார். ஈழநாட்டுப் புலவர்கள் கவிவீரராகவ முதலியாரவர்கட்கு விடுத்தவினாக்களும் அவர் பகர்ந்த விடைகளும் வருமாறு :—

வினா :—உதிரமுண்ணும் பறவை யாது;

விடை :—துக்கம்.

வினா :—'பசும் பால்' என்னும் பண்புத் தொகைக்குப் பொருளென்ன ?

விடை :—கார்காலத்து வெள்ளாட்டுப்பால்.

வினா:—''பங்கமின் மாது பசுமஞ்ச ணன்றிழந்தும்
  மங்கலமு நன்கலமு மற்றிழக்காள்''
  பின்னிரண் டடியும் யாவென,

விடை :— —சங்கை யென்ன

''மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
  நன்கல நன்மக்கட் பேறு''

என்று அவர்கள் கேட்டதற்கேற்பத் தனிச்சொல் தான் இடைப்பெய்து திருக்குறளி லொருகுறளைக் கொண்டு விடை கொடுத்தார். ‡

* நால்வாய்=தொங்குகின்றவாயையுடையது (யானை).

† ஒருவாய் நால்வாய் என்பதாற் பெறப்படு நயமுங்காண்க.

‡ இவ்வினாக்கள் மொத்தம் ஐந்தென்றும், அவற்றிலிரண்டு தனக்கு ஞாபகமில்லை யென்றும், அந்தகக் கவிராயர் மரபிற்றோன்றிய

இவர் இராமாயணம் அவதானித்துச் சொன்னபோது அரசன் (பரராசசிங்கம்) பாடியது :—

"இன்னங் கலைமகள் கைமீதிற் புத்தக மேந்தியந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப்பா ளென்ன புண்ணியமோ
கன்னன் சயந்தன் கவிவீர ராகவன் கச்சியிலே
நன்னெஞ்ச மேடெனக் கற்றான் கனமுத் தமிழையுமே."

இக்கவியினாலும் இவர் கற்றறிந்த அருமை தெரிய வரும்.

இவர் அரசன்மீது வண்ணம் பாடியபோது அதன் சொன்னேக்கும பொருளேக்குந் தொடைநோக்குங் கண்டு களித்து இவருடைய கல்வித்திறத்தை அரசன் வியந்த செய்யுள் :—

"விரகன்முத் தமிழ்க்கவி வீர ராகவன்
வரகவி *மாலையை மதிக்கும் போதெலாம்
†உரகனும் வாணனு மொப்பத் தோன்றிணற்
சிரகர கம்பிதம் செய்ய லாகுமே."

இவரியற்றிய ஆரூருலாவைக் கேட்டு ஆனந்த மடைந்து பர ராசசேகரன் (பரராசசிங்கம்) பாடியது :—

---

காலஞ்சென்ற கவி வீரராகவ - முத்துசாமி முதலியார் சொல்லத் தாம் கேட்டதாக வித்வான் ம-ா-ா-ஸ்ரீ மாகறல் - கார்த்திகேய முத லியார் தெரிவித்தனர்.

* இது இவரியற்றிய கழுக்குன்ற மாலையைக் குறித்த தென் பாரு முளா.

† சிரக்கம்பிதம் செய்ய ஆயிரந்தலைகளை யுடைய ஆதிசேடனும் கரக்கம்பிதம் செய்ய இரண்டாயிரம் கைகளையுடைய பாணாசுரனும் வேண்டு மென்பது.

*" புவியே பெறுந்திரு வாரூ ருலாவைப் புலவர்க்கெல்லாஞ்
செவியே சுவைபெறுமாறு செய்தான் சிவஞானமனு
பவியே யெனுநங் கவிவீர ராகவன் பாடியநற்
கவியே கவியவ னல்லாத பேர்கவி கற்கவியே."

பிறகு இவர் யாழ்ப்பாணத்திற் சின்னாளிருந்து தான் பெற்ற பல்லக்குமுதலிய பரிசுகளுடனும் பரிவாரங்களுடனும் தன்னூர்க்குத் திரும்பிவந்தனர்.

இஃதிப்படியாக, 'யாழ்ப்பாண வைபவம்' என்னு † நூலில், ஈழ நாட்டை அரசாண்ட உக்கிரசிங்க ராஜனுடைய குமாரன் வாலசிங்க ஜயதுங்க வரராஜன் காலத்து இவர் யாழ்ப்பாணத்திற்குப் போனாரென்பதும் இன்னுஞ் சில விஷயங்களும் தெரிய வருகின்றன :—

"இரண்டு கண்ணு மிழந்த கவிவீரராகவ முதலியா ரென்பவர் யாழ்ப்பாண வாலசிங்க மகாராஜன் பேரில் பிரபந்தங்க ளியற்றிச் செங்கடக நகரிக்குப்போய் ராச சமுகத்தில் யாழ்வாசித்துப் பாடிவருங்காலத்தில் அரசன் மிகச்சந்தோஷப்பட்டு இலங்கையின்வடதிசையிலுள்ள மணற்றிடல் என்னும் நாட்டை அவருக்கு உபகாரமாகக்கொடுத்தான். இந்நாட்டுக்கு அவர் யாழ்ப்பாணம் எனப் பெயரிட்டு இவ்விடம் வந்து சேர்ந்து வடதிசையி லிருந்து சில தமிழ்க் குடிகளை யழைப்பித்து அக்காலத்திற் சிங்களவரையும் மற்றும் பிறரையும் அரசாளக் கருதித் தமிழ்க் குடிகளையு மங்கிருந்த சிங்களவருடன் குடியேற்றிச் சிலகாலம் அரசாட்சி செய்து வயோதிகராய் இறந்தார்."

---

* இந்நூலா ஆசிரியர் இவர்தாமோ வெனச் சரியாய் அறியும் பொருட்டுக் கும்பகோணம் காலெஜ் தமிழ்ப்பண்டிதர் பிரமஸ்ரீ உ. வே. சுவாமிநாத ஐயரவர்கட்கு எழுதிக் கேட்ட போது அவர், "ஆரூருலா கவிவீரராகவ முதலியார் செய்ததே. வேறெவருஞ் செய்யவில்லை. இவ்வுலாவை யான் பலமுறை படித்திருக்கிறேன். விரைவிற் பதிப்பிக்கவுங்கூடும்" என்று இவ்வாறு எழுதியதைக்கண்டு களிகூர்ந்தேன்.

† பக்கம் 11 - 14.

"இப்படி யிருக்குங்காலத்துப் பொன்பற்றியூர் வேளாளனாகிய பாண்டிவளவ னென்னும் பிரபுவின் முயற்சியால் திரை உக்கிர சோழன் மகன் சிங்ககேதுவுக்கு மருகனாகிய சிங்கையாரியன் என்பவன் பிறகு யாழ்ப்பாணத்திற்கு அரசனாயினான். அவன் அப்போது பற்பல இடங்களிலிருந்த வேளாளரைக் கொண்டுவந்து இவ்விடம் குடியேற்றினான். அவர்களில் உயர்குல வேளாள மரபினராகிய தொண்டைமண்டலத்து மண்ணாடுகொண்ட முதலியாரை இருபாலையிலும், **செய்யூர்** இருமரபுந் துய்ய தனிநாயக னென்னும் வேளாளரை நெடுந்தீவிலுங் குடியேற்றினான். × × ×. சிங்கையாரியன் காலத்துப் புவனேகவாகு என்னும் மந்திரி அங்குள்ள கந்தசாமி கோயில் திருப்பணி சாலிவாகன சகம் 870-ம் (870+78=948-கி.பி) வருஷத்தில் நிறைவேற்றினான்."

'யாழ்ப்பாண வைபவம்' என்னும் நூலிலுள்ள இவ்விஷயம் முழுதும் உண்மையென நம்புதற்கிடமில்லை. அவரங்கேயே யிருந்திறந்தா ரென்பதும் யாழ்ப்பாணத்திற்கு அரசராயிருந்து ஆண்டனர் என்பதும் அவரிருந்த காலம் கி. பி. 948-வது வருஷத்திற்கு முற்பட்டதா மென்பதும் பொருத்தமுற்றனவாகத் தோற்றவில்லை. அவர் தமிழாளரை அவ்விடங் குடியேற்றி யிருக்கலாம். மற்றவை எவ்வளவு உண்மையென்பது மேலே தெரியவரும். இவர் பரிசுபெற்றுத் திரும்பித் தன்னூர்க்குப் போம்போது திருநெல்வேலியிலுள்ள **கயத்தாற்று** அரசன்மேல் ஒருலாப் பிரபந்தம் பாடினர். அதனைக்கேட்டுக்களித்த கவிகளிலொருவர் அப்போது இவரைப் புகழ்ந்து பாடிய வெண்பா:-

> "ஒட்டக்கூத் தன்கவியு மோங்கியகம் பன்கவியும்
> பட்டப் பகல்விளக்காய்ப் பட்டவே—எட்டதிக்கும்
> வீசுங் கவிவீர ராகவனாம் வேளாளன்
> பேசுங் கவிகேட்ட பின்."

இக்கவியினால் இவர் கம்பர்க்கும் ஒட்டக்கூத்தர்க்கும் பிந்தினவரென்று ஏற்படுகிறது. ஒட்டக்கூத்தரும் கம்பரும் குலோத்துங்கசோழன் காலத்திருந்தவர்கள். *அவனிருந்தது பதினோராம் நூற்றாண்டினிறுதியில். ஆகவே, யாழ்ப்பாண வைபவத்திற் கூறுங்காலம் சரியான தன்றென்பது எளிதில் விளங்கும்.

"மின்னு மாளிகை யனந்தை யாதிபதி
சந்த்ரவாண மகிபாலன்முன்
வீரராகவன் விடுக்கு மோலைதன்
விருப்பினால் வலியவேயழைத்
துன்னுகாவிய மதிற்பெருத்தவொரு
கோவை யோதுகெனவோதின
னோதி மாதமொரு மூன்று போகியொரு
நாலுமாத மளவாகவு
மின்னமுந்தனது செவியிலேறவிலை
யென்னிலென்ன வுலகெண்ணுமோ
விராசராசர் திறைகொள்ளு மென்கவிதை
யிங்குவந்து குறையாகுமோ
தன்னையென் சொல்வரென்னை யென்சொல்வர்
தான்தமிழ்க்கு மணமல்லவோ
தன்புகழ்க்குமிது நீதியோ கடிது
தானின்னே வரவேணுமே"

என்னுஞ் சீட்டுக்கவியினால் இவர் அனந்தையாதிபதி சந்திர வாணன் மீது ஒரு கோவை பாடியதாகத் தெரியவருகிறது.

---

* Kulottunga Chola Deva I (1070—1118.) See South Indian Inscriptions, Vol II Part ii, Page 153.

"இனிதினிதெனச்சேரசோழபாண்டியர்மெச்சுமிச்சிதமதுரவாக்கி
**யீழமண்டலமளவுந்திறைகொண்டகவிவீரராகவன்**விடுக்குமோலை
வனிதையர் விகாரமன் மதராஜ ரூபன்மயி லையாதி பதிசக்கிர
வாளத்தியாகிநங்காளத்தி கிருஷ்ணப்பவாணனெதிர்கொண்டுகாண்க
கனதமிழ்த் துறையறி மரக்கலங் கன்னிகாமாட நன்னூற்
கட்டுபேர் கொட்டாரம் வாணி சிங்காசனங் கவிநாடகஞ் செய்சாலை
வினவுசிவகாதையிற்சர்க்கரையெனத்தக்கவினையேனுடம்புநோயால்
மெலியுமோ மெலியாத வகைபால்பெருத்ததொருமேதிவரவிடவேணு
மே."

இந்தச் சீட்டுக்கவியினால் இவர் ஈழமண்டலஞ் சென்று பரிசு பெற்ற விஷயம் தெரியவருகின்றது. அங்கேயிருந்து இறந்தனர் என்னுங் கொள்கையை இது குலைத்து விடுகின்றது.

இவர் செங்கற்பட்டிலிருந்த **திம்மய்ய அப்பய்யன்** என்பவருடைய வேண்டுகோட் கிணங்கித் திருக்கழுக்குன்றப் புராணம் பாடினார். அது பின்வருஞ் சீட்டுக்கவியாற் றெரியும்:—

"இந்நாளிருந்த பேர்புதிய பாகம் பண்டிருந்த பேர்பழையபாக
மிருபாகமும் வல்ல லக்கணக் கவிவீரராகவன் விடுக்குமோலை
அன்னதானப் பிரவாசன் பிரசங்கத்தனந்த சேடாவதார
னகிலப்பிரகாசன் **திம்மய்ய வப்பய்யன்** மகிழ்ந்துகாண்க
தன்னொரு மோலையும் வரக்கண்டுநாம் **வேத சயிலபுராண**த்தையித்
தனைநா ளிருந்தோதி ஞெமரங்கேற்றுவது தான் வந்தலாமலில்லை
நன்னவலோருடனிதைக்கேட்டெனைச்சோழநாட்டுக்கனுப்பவேணும்
நவிலோலை தள்ளாமலே சுக்கிரவாரத்து நாளிங்கு வரவேணுமே."

இதனால் திருக்கழுக்குன்றப் புராணம் பாடியபிறகுதான் இவர் தெற்கே சென்றனர் என்று ஊகித்தற்கிடமுண்டு. ஆயினும் இவர் யாழ்ப்பாணத்திற்குப் போனது இதற்குப்பின்னேனும் முன்னேனு மிருக்கலாம். பின்னெனக் கொள்வதே

சிறப்புடைத்து. இவருடைய சீட்டுக்கவியின் சிறப்பை அக்காலத்துள்ள **நிரஞ்சனநாதர்** என்பவர் ஒருவர் எடுத்தோதியிருக்கின்றனர்.

> "**சீட்டுக்** கவியென்று சொல்வார் சிலரந்தத் சீட்டுக்கவி
> காட்டுக் கெறிந்த சிலவாகிப் போம்செங்கனகரத்னச்
> சூட்டுக் கிரீட முடிவேந்த ருற்பத்தி சூறைகொள்ளும்
> நாட்டுக் கிலக்கியங் கவிவீர ராகவ னற்கவியே."

இப்படிப் பல்வேறிடங்கள் சென்று பாடிப்பரிசுபெற்றுத் திரும்பித் தன்னூர் சேர்ந்தபோது தன் மனைவி தான் பெற்றுவந்த பரிசு யாதெனக் கேட்டதும் அதற்கிவர் கூறிய உத்தரமும் பின்வரும் பாத்தெரிக்கின்றது.

> "**இ**ம்பர்வா னெல்லை யிராமனையே பாடி
> யென் கொணர்ந்தாய் பாணு நீயென்றாள் பாணி
> வம்பதாங் * **களப** மென்றேன் பூசுமென்றாள்
> **மாதங்க** மென்றேனும் வாழ்ந்தே மென்றாள்
> பம்புசீர் **வேழ** மென்றேனின்னு மென்றாள்
> **பகடெ**ன்றே னுழுமென்றாள் பழனந்தன்னைக்
> **கம்பமா** வென்றே னற்களியா மென்றாள்
> **கைம்மா** வென்றேன் சும்மா கலங்கினாளே."

இவர் தன் மனைவியுடனிருந்து பலநாளில்லறம் இனிது நடாத்தி அந்தத்திற் †சிவசாயுர்சிய முற்றனர்.

---

* களபம்=யானை; வாசனைத்திரவியம். மாதங்கம்=யானை; பொன். வேழம்=யானை; கரும்பு. பகடு=யானை; எருது. கம்பமா=யானை; மா. கைம்மா=யானை. இவற்றை இவர்யானை யென்னும் பொருளில் உபயோகிக்க இவர்மனைவி அதை யறியாது போன்று நடித்து வேறு பொருளைக்கொண்டதாகக் குறிப்பித்தனள் என்பது.

† இவர்பாடிய நூல்களாலும் இன்னுஞ் சில ஆதாரங்களாலும் இவர் சைவரெனத் தெரியவருகிறது. இவர் சந்ததியிற் பிற்காலத்

இவர் இறந்ததைக் கேள்வியுற்றுக் கவிராஜர்களும் புவி ராஜர்களும் ஏக்கமடைந்தனர். அப்போது கயத்தாற்று இராஜா பாடிய கையறுநிலை :—

"இன்னமுதப் பாமாரி யிவ்வுலகத் திற்பொழிந்து
பொன்னுல கிற்போய்ப் புகுந்ததான்—மன்னும்
புவிவீர ராகமன்னர் பொன்முடிமேற் சூட்டுங்
கவிவீர ராகவமே கம்".

"தோற்று தொழிந்திருந்த ஞாலக் கவிகளெல்லா
மேற்று ரகையின் விளங்கியவே—யேற்றலுங்
கன்னாவ தாரன் கவிவீர ராகவனும்
பொன்னாருஞ் செங்கதிரோன் போய்."

"முன்னாட்டுத்தவமுனியுஞ்சேடனும்வான்மீகனுமுன்முன்னில்லாமற்
தென்னாட்டுமலையிடத்தும்பாரிடத்தும்புற்றிடத்தும்சென்றுசேர்ந்தார்
இந்நாட்டுப் புலவருனக் கெதிரிலையே கவிவீர ராக வாநீ
பொன்னாட்டுப் புலவருடன் வாதுசெய்யப் போயினையோபுகலுவாயே."

இவரியற்றிய நூல்களாவன :—திருக்கழுக்குன்றப் புராணம், திருவாரூருலா, *சந்திரவாணன் கோவை, கயத்தாற்றரசனு

திருந்து "திருவேங்கடக் கலம்பகம்" பாடிய முத்தமிழ்க் கவிவீர ராகவ முதலியார் வைணவர். இவர் பெண்வழி வந்தோர். இவர் வழிவந்தவர்களும் வைணவரே. இப்போதிருக்கும் ம-ள-ள-ஸ்ரீ ஸ்ரீநி வாச முதலியாரும் வைணவர்.

*இக்கோவையைப்பற்றிய கதை ஒன்று உண்டு :—அந்தகக்கவி வீரராகவமுதலியார் இக்கோவையைக் காஞ்சிபுரத்தில் ஒருகால் அரங்கேற்றியபோது அவ்வூரில் வித்வத்திறம் பெற்றிருந்த 'அம்மைச்சி' என்னும் ஒரு தாசி ஆங்குப்போந்து, கவிராயர் தம் கோவையின் முதற் பிரிவாகிய களவியலில் "பெருநயப்புரைத்தல்" என்னும் துறையின்பாற்படும்,

லா, சேயூர்க்கந்தர் பிள்ளைத்தமிழ், சேயூர்க் கலம்பகம், திருக்கழுக்குன்றமாலை. "கந்தரந்தாதியைப் பாராதே கழுக்

"மாலே சிகராகுஞ் சந்திர வாணன் வரையிடத்தே
பாலேரி பாயச்செந் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்
டாலே யெருவிட முப்பழச் சேற்றி னமுதவயன்
மேலே முளைத்த கரும்போ விம்மங்கைக்கு மெய்யெங்குமே"

என்னுஞ் செய்யுளைச் சொன்னதும், அவள் "கவிராயர்க்குக் கண்தான் கெட்டது; மதியுங்கெட்டதோ" என்றாள். அவர் ஒன்றுந் தோன்றாது சற்றசைவற்று நிற்கக்கண்டு அவள், "ஐயா, கரும்பு புன்செய்ப்பயிராயிற்றே. 'சேற்றிம் முளைத்த கரும்பு' என்று சொன்னீர்களே. பொருந்துமா?" என்னலும். அவர், "வேண்டுமாயின் மாற்றிவிடலாம்" என்று சொல்லி ஏட்டைப் பார்த்துப்படித்துக் கொண்டு வருபவரை நோக்கி, "ஐயா, கொம்பை வெட்டிக் கால் கொடும்" என்னலும் கவிராயருடைய அபிப்பிராயமறிந்து அவர் உடனே "பழச்சாற்றினமுதவயன் மேலே முளைத்த கரும்போ" என்று வாசித்தார். இருவருடைய புத்திக் கூர்மையை அங்குளார் அனைவரும் கண்டு மகிழ்ந்தனர்.

மறுநாள் பிரசங்கத்திற்கு அம்மைச்சி தனது பல்லக்கிலேறி வருவதையறிந்த கவிராயர்,

"கலைமகளு நாணிநின்று கைகட்டிப் போற்றச்
சிலைமதவேள் முன்கணையே தாங்கக்—குலமருவு
கொம்மைச்சிங் காரமுலைக் கோதி திருப்பனங்காட்
டம்மைச்சி வாரா ளதோ."

என்று பாடியதை யவளறிந்து அன்று முதல் இவர்களிருவரும் வித்வத்தன்மையினால் சிநேகிதரானார்கள்.

இவ்வாறிருக்கும் நாளில் அவ்வூர்ப் பிராமணர்கள் 'இவள் வித்யாகர்வங் கொண்டிருக்கிறாள். இவளை எவ்விதத்திலாவது அவமானப் படுத்தவேண்டும்' என்றெண்ணி, வரதராஜப் பெருமாள் இரதோற்சவத் தினத்தன்று இரதத்தை அவள் வீட்டில் முட்டச் செய்து, வீட்டையிடித்துத் தள்ளிப் பிறகு தேரைச் செலுத்தவேண்டுமென்று பிராமணர்கள் அவட்குத் தெரிவிக்க, அவள் அதனைத் தன் மித்திரராய கவிராயர்க்குத் தெரிவித்தாள். அவர் பிராமணர்களை யழைத்து, "ஐயன்மீர், வீட்டை யிடிக்காது வேறுபாயந் தேடலாகாதோ தேர்செல்வதற்கு?" என்ன, அவர்கள் வீட்டையிடித்தால்தான்

குன்றத்து மாலையை நினையாமிதே" என்னும் பழமொழியினால் இம்மாலையினுடைய அருமையும் பெருமையுமினிது விளங்கும். ஆயினும் இவர்தான் கழுக்குன்ற மாலையாசிரியரென்பது ஒரு தலையாகக்கொள்ள முடியவில்லை.

"மாடேறு தானரு மதியேறு சென்னியு மாமறையோ
னோடேறு கையு முடையார் தமக்கிட மூருழவர்
சூடேறு சங்கஞ் சொரிமுத்தை முட்டையென் றேகமலக்
காடேறு மன்னஞ் சிறகா லணைக்குங் கழுக்குன்றமே."

இச்செய்யுளும் அக்கழுக்குன்ற மாலையிலுள்ளது தான். இவர்தம் சீட்டுக் கவிகளிற் குறித்துள்ள ஈழநாட்டரசனாகிய பரராசசிங்கம் (பரராசசேகரன்), சந்திரவாணன், திருக்கழுக்குன்றப் புராணம் பாடிச்செய்த திம்மய்ய அப்பய்யன் என்பவர்களுடைய கால மின்னதெனத் தெரியவரின் இந்நூலாசிரியர் காலம் இதுவென உறுதியாய்க் கூறலியலும். பரராசசேகரி பதினேழாம் நூற்றாண்டின் முதலிலிருந்ததாகத் தெரியவருகிறது. அனந்தையாதிபதி சந்திரவாணனுடைய வரலாறு ஒன்றும் இன்னும் புலப்படவில்லை. அனந்தை

---

இரதம் எளிதிற் செல்லுமென்றார்கள். கவிராயர் அவர்களுடைய உட்கருத்தறிந்து அவர் தம் திக்குணத்துக்குப் பரிதபித்து,

"பார்ப்பார் குரங்காய்ப் படையெடுத்து வந்தீரோ
தேப்பெருமா னோகச்சிச் செல்வரே—கோப்பாகக்
கொம்மைச்சிங் காரலங்கைக் கோட்டையென்று வந்திரீ
தம்மைச்சி வாழு மகம்"

என்று இப்பாட்டைப்பாடியதும் வீட்டை யிடிப்பதற்கில்லாது தேர் சென்று விட்டதெனவும் சொல்வர். இக்கதையைச் சிலர் இன்னும் வேறுவிதமாய்ச் சொல்லுதலு முண்டு.

என்பது திருவனந்தபுர மன்றென்று தெரியவருகிறது.* திம்மய்ய (திம்மப்ப?)† என்னும் பேருடைய கனவான்கள் சிலர் செங்கற்பட்டில் பூர்விகத் திருந்திருக்கிறார்கள். இது யாரைக் குறித்து நிற்கிறதென்பது தெரியவில்லை. விஜயநகர ராஜ்ஜியத்தை ஆண்ட கிருஷ்ணதேவராயர் (1509-1530) காலத்து மந்திரியாயிருந்த **திம்மராஜா** என்பவர் (1526) செங்கற்பட்டிற்கு வந்து அதற்குக் கிழக்கிலுள்ள திருவடைசரம் என்னும் கோட்டையிலிருந்த குறும்பர் தலைவராகிய காந்தவராயன் சேதுராயன் என்பவர்களைத் தந்திரத்தாற் றொலைத்துச்செங்கற்பட்டை இராயருடைய ஆளுகைக்கு உள்ளாக்கினார். மேற் குறித்த செய்யுளிற் குறிக்கப்பட்டவர் இவர்தாமென்று சொல்வதற்கில்லை. ஒருவேளை இவர் சந்ததியாராகவிருந்திருக்கலாம். தலைக்கோட்டையுத்தத்தில் (1565-கி.பி) தோல்வியுற்று விஜயநகர ராஜ்ஜியம் க்ஷீணதிசை யடைந்த காலத்து அக்குலத்தவர் அவ்விடம்விட்டுச் **சந்திரகிரியிலும்,** பதினாறும் நூற்றாண்டிறுதியில் **செங்கற்பட்டி**லொரு கோட்டை கட்டிக்கொண்டு அவ்விடத்திலும் சிலகாலந் தங்கியிருந்தார்கள். இராயருக்கு மந்திரியாயிருந்த திம்மராஜா அந்த இராயரா

---

*"திரு அனந்தையாதிபதி சந்திர வாணன்" என்பதில் உள்ள திருவனந்தை தற்காலத்திய திருவனந்த புரத்தைக் குறிக்குமென்று கொள்வது இயல்பேயாகும். ஆயினும் அது அந்நகரைக்குறித்ததாகக் காணவில்லை. ஏனெனின் திருவனந்தபுரத்து அரசர்களுக்கெல்லாம் ரவிவர்மா என்றும் ஆதித்தியவர்மா என்றும் பேரிருந்ததே யன்றி இப்பெயரைக் காணோம். [The History of Travancore, by P. Sankunni Menon, pp. 98-110 : Kings from 1502-1728.]

† திம்ம + ஐய = திம்மைய=திம்மய்ய; திம்மராஜாகுளம் என்று ஒருகுளம் இப்போதும் செங்கற்பட்டிலிருக்கிறது. See pages 83, 88, Chingleput District Manual.

லேயே அவமதிக்கப்பெற்றுத் தன்னிலையிழந்தனர்.* ஆயினும் அவர் பெயர்கொண்ட இவர் அந்தச் சந்ததியிற்றோன்றிய பிற்காலத்தவராயிருக்கலாம். சிறுதேர்ப்பருவம், 6-வதுசெய்யுளி னால் ஆசிரியர் 1521-வது † வருஷத்திற்குப் பின்னிருந்தவர் என்றேற்படுகிறதேயன்றி இன்ன வருஷத்தி லிருந்தாரென் பது சரியாக அகப்படவில்லை.

1680இல் திம்மப்பநாய்க்கன் ‡ என்னுமொரு கனவான் செங்கற்பட்டிலும் சென்னையிலுமாக இருந்ததாகத் தெரிய வருகிறது. மேற்குறித்த பட்டிலுள்ள பெயர் இவரைக் குறிக்கினுங் குறிக்கலாம்.

கவி வீரராகவ முதலியார், இலக்கண விளக்கஞ்செய்த **வைத்தியநாத நாவலரைப்** பற்றிப் புகழ்ந்திருக்கின்றனர்:—

§ "ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடா ரோநாற்பத்
தொன்பதின்ம ரென்றே யுரைப்பரோ—இம்பர்புகழ்
வன்மீக நாதனருள் வைத்திய நாதன்புடவி
தன்மீதங் காட்சரித்தக் கால்."

'தொண்டை மண்டல சதகம்' பாடிய **படிக்காசுப்புலவர்** இந்நாவலருடைய மாணாக்கர். இப் படிக்காசுப்புலவர் இராமநாத

---

* See Sewell's Forgotten Empire (Vijayanagar) pp. 158, 359.

† அவ்வருஷத்தி லிருந்திருக்கக் கூடாதோ எனின் இருந்திருக்கமுடியாது. அக்காலத்தே இந்நூ லெழுதியிருக்கும் பக்ஷத்தில் "மகரம்பகுத்த திருநாள்" என்றுமாதத்தைமாத்திரம் எடுத்தெழுதாது வாரம், நக்ஷத்திரம், திதி, யோகம், கரணமுதலியவற்றையுங்கூட்டி எழுதியிருப்பார். அதற்குக் கொஞ்சக்காலத்திற்குத் தான் முந்தியதாயினை அவ்வூராராயினும் அதனையவர்க்குத் தெரிவித்திருப்பார். இது எழுதியது (1521 திருவிழா) ஏற்பட்டதற்கு அநேக வருஷகாலம் பிந்தியதென்று தெரியவருகிறது.

‡ See Page 121. Madras in the Olden Times by J. Talboys Wheeler.

§ இலக்கண விளக்கப் பதிப்புரை.

புரத்தில் அரசாண்டுவந்த இரகுநாத சேதுபதி (1685-1723 கி. பி.) யின் சமஸ்தான வித்துவான். 1685வரு வரையும் அரசாண்ட சேதுபதியின்பேரில் அக்காலத்திலிருந்த **அமிர்த கவிராய** ரென்பவர் ஒருதுறைக் கோவை யென்னும் ஒரு நூல் செய்திருக்கின்றனர். அமிர்த கவிராயரும் அந்தகக்கவி வீரராகவமுதலியார் காலத்தவர். படிக்காசுப் புலவர் சுமார் 200 வருஷங்கட்கு முன்னிருந் திருப்பதாய்த் தெரியவருவதனல் அவராசிரியர் காலத்திருந்த அந்தகக் கவி வீரராகவமுதலியார் அதற்கு முன் இருபது அல்லது முப்பது வருஷங்கட்குமுன் னிருந்திருக்கலாம் *. அதாவது இற்றைக்குச் சுமார் 240 வருஷங்கட்கு முன்னிருந்திருக்கலாம். திம்மய்ய அப்பய்யன் (1680) மேற் குறித்த நாய்க்கராக இருக்கலாம். இவ்வந்தகக் கவிவீராகவ முதலியார் வம்சத்தில் இப்போதிருக்கும் கவிராயர் ம-ா-ா-ஸ்ரீ ஸ்ரீநிவாச முதலியார் அவர்க்கு எட்டாவது சந்ததியார் என்று தெரியவருவதால், மேற்குறித்த காலமே (1661?) அந்தகக் கவிவீரராகவ முதலியார் காலமென்றுகொள்ளலாம்.

இவர் இன்ன வருஷத்திலிருந்தா ரென்பது இதனினும் விவரமாய் இனித்தெரியவரின் இவரியற்றிய †கலம்பகத்தை அச்சிட்டு வெளிப்படுத்தும்போது, இதன் விவரமும் அதன் முகவுரையிற் கூறப்படும்.

சென்னை, பிலவவரு தைமீ 28உ. **க. குப்புசாமி முதலியார்.**

---

* இலக்கணக்கொத்து நூலாசிரியராகிய சாமிநாததேசிகர், நன்னூல் விருத்தியுரை யெழுதிய சங்கர நமச்சிவாயப் புலவருடைய இயற்றமிழாசிரியர். இந்தத்தேசிகர் வைத்தியநாத நாவலர்காலத்துச் சிறுவயதினராக விருந்திருக்கின்றனர். சங்கர நமச்சிவாயப்புலவர் 180 வருஷத்திற்கு முன்னிருந்திருக்கின்றனர்.

† அம்புலிப்பருவம், செய்யுள் 10. பக்கம் 55.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்.

## விநாயகவணக்கம்.

பேறுய கீரன்முற் பகருமுரு காறெனப்
பெருகாறு கண்டுமுலகிற்
பேரருண கிரிதிருப் புகழ்கண்டு நாளுது
பெறுமவத் துறுமாசையா
லேறுய வாகனக் கடவுடன் மைந்தனுக்
கெமதுசெய் கைக்கந்தனுக்
கிளமைவள மைப்பிள்ளை யங்கவிதை நூலெழுத
வென்கரத் தாமரைதொழு
மாறுயி ரத்துமுக முடையது சடைக்கா
டமைத்தநா யகன்வருவிலா
மந்தமா மேருவிற் பந்தவே தங்குறித்
தறிவியா தன்கூறுநா
ஊறுயி ரத்தின்மே லிருபதை யாயிரங்
கவிதைநூ லகலமுழுது
நுதிமருப் பாலெழுது மொருவா ரணத்திரு
நூபுரத் தாமரையுமே.

---

முருகாறு எனப் பெருகு ஆறு = திருமுருகாற்றுப்படை யென்னு நூல். செயலை - சேயூர் என்பதன் மரூஉ. நூபுரத் தாமரை யென்றதற்கேற்ப, "கரத்தாமரை" யென்றார். ஆயிரத்து முகமுடையது = கங்கை. பந்தவேதம் = சாகைகளையுடைய வேதம். கவிதை நூல் = பாரதம். அவற்றுறுமாசையால் எனவும் பாடம்.

முதலாவது

# காப்புப் பருவம்.

## திருமால்.

உலகமார் பலகோடி யுயிருமுயிர்த் துடையா
னுபயமூலைத் தலையமுதி னெழுக்கருந்துங் குருந்தைத்
திலகமார் மகுடமிசைக் கடம்பலரு மரசைச்
செய்கைவளம் பதிதெய்வ சிகாமணியைப் புரக்க
விலகுமார் பகலமெலாங் கமலையிடைக் கொடுத்து
மெழுந்துவிழும் பரிதிமதி யிருகைவிடா தெடுத்தும்
பலகமார் படிசுமந்த பாப்பமளிப் படுத்தும்
பாற்கடன்மேல் விழிவளருங் கார்க்கடன்மே னியனே.(க)

## வன்மீகநாதர்.

### வேறு.

பூநாறு பொற்பிற் கடம்பன் றனைப்புங் கவர்க்காகவே
போராடு சத்தித் தடங்கஞ் சனைப்புன் சொலைத்திருமால்
பானூறு முத்தப் பரங்குன் றனைப்பண் டுமைத்தேவியார்
பால்வாய னைப்பச் சிளங்கந் தனைப்பண் பளித்தானுமால்

காப்புப்பருவம்:—அஃதாவது பாட்டுடைத்தலைவனுடைய குழவியைத் தேவர் கொலையகற்றிக் காக்கவெனத் தாயர்கூறுங் கூற்றுகப் பாடும் பகுதியதென்க. இது மூன்றாந் திங்களிற் கூறப்படுவது. இரண்டாமாதமென்பாருமுளர்.

க. கடம்பு :-ஆகுபெயராய் மாலையை யுணர்த்திற்று. எழுந்துவிழும்=உதித்து மறைகின்ற. பரிதி மதி - எனபன உவமையாகுபெயராய்ச் சூரியன்போன்ற சக்கராயுதத்தையும், சந்திரன்போன்ற சங்கினையுங்குறிக்க நின்றன. பலகம் = ஆயிரந்தலை. பாப்பமளி = சேஷசயனம்.

உ. கஞ்சன் = (காமாகிய) தாமரைமலரையுடையவன்.

கானாறு பக்கத்தி லெங்குங் குதிக்குங் கயற்பாலிலே
காவாயி ரத்துப் பசுங்கொம் புதிர்க்குங் கனிக்கோடிபாய்
தேனாறி ரைத்துக் குரம்புங் கரைக்குந் திரைப்பாலிசூழ்
சேயூர் தனிற்புற் றிடங்கொண் டிருக்குந் திருத்தாளையே,

முத்துவாளியம்மையார்.

வேறு.

மகரமெறி கடல்சுவற விடுசத்தி வீரனை
வடவரையி னருவிபுரை வடவச்ர மார்பனை
மருவிலறு முகனைநறு மதுமிக்க நீபனை
மதுரையிறை யவர்பொருளை யளவிட்ட தூயனை
யகரமுத லெழுதலென வகிலத்து மூலனை
யனலிபெறு மனைவிதன தருமைக்கு மாரனை
யருணகிரி சொரிகவிதை யமுதத்தி னேயனை
யரன்மகனை யரிதன்மரு கனைநட்பி னாள்பவ
ணிகரசல வசலமக ணிருதப் புராதனி
நிமலைபது பவகமலை வனதுர்க்கை மாலினி
நிலவலய முழுதுயிரை நிருமித்த காமினி
நியமவறு சமயநெறி நிறுவிட்ட மாயினி
சிகரகிரி விலின்வலவர் தெரிசித்த மோகினி
சிவபாமை தருமையுமை திலதத்தி லானனி
திருபரிதி மதிமுளரி யொருமுக்க ணாயகி
திரையர்புரி வருகௌரி திருமுத்து வாளியே. (௩)

---

உ. குரம்பு=வரம்பு. பாலி=பாலியாறு (பாலாறு.)

௩. நீபன் = கடப்பமாலையை யுடையவன். இறையவர்பொருள்=இறையனார் அகப்பொருள், களவியற்பொருள். சுவாகாதேவியினிடத்து ஓர் கற்பத்துத் தோன்றினாராகலின், "அனலிபெறு மனைவி தனதருமைக் குமாரன்" என்றார்.

## கங்காதேவி.

### வேறு.

மூதியதிரி புவன பதவி புதைதரப் போர்த்தவண்
முனிவர் முனிவினெரி சகரர் கதிபுகச் சேர்த்தவண்
முதல்வன் முதல்விகர வியர்வி லொலிகெழப் பூத்தவண்
முழுகு மனைவரையு மொழுகும் வினையறத் தீர்த்தவள்

குதிகொ ளருவியிம கிரியின் மகளெனச் சீர்த்தவள்
குலவு சதமொருப திலகு முகமெடுத் தார்த்தவள்
குழகர் சடிலகுல மவுலி குடிகொளத் தாழ்த்தவள்
குமரி முதனதியி னரசி பதமெடுத் தேத்துதும்

விதியின் முடியுடைய விறல்கொ டறைசிறுத் தாக்கனை
வெளிறு மூடுமகளி ரறுவர் முதுமறைத் தேக்கனை
விரியு மூவரிமிசை வெயிலின் மயின்மிசைத் தோற்றனை
விமலர் செவியிலொரு மொழியை மொழிபகர்த் தேற் [றனை

மதியை மதிதவழு மதுரை முதுதமிழ்க் கூட்டனை
வலிய தணிகைதனில் வளர்கு வளைமலர்ச் சூட்டனை
வழுவி லருணகிரி புகழு முதுதமிழ்த் தூக்கனை
வளவ நகரின்வட தெருவின் முருகனைக் காக்கவே. (ச)

---

ச. முனிவர்=கபிலமுனிவர். பார்வதி தேவியார் இறைவன்ற னிரு கண்களை மூடலும் அந்தகார மூலகின் மூடவே, அவன் தன்து நெற்றிக்கண்ணைத் திறப்ப, இறைவி அஞ்சுதலினாலுண்டாகிய அவளது திருக்கரத்து வியர்வையே கங்கையாகப் பரந்தோடியதென்று கந்தபுராணங் கூறிற்றாகலின், "கரவியர்வி லொலிகெழப் பூத்தவள்"என்றார். சிறுத்தாக்கன்=குட்டினவன்.

## சித்தி விநாயகர்.

### வேறு.

மருவரு சுருப்பொலி கலித்ததார் நீபனை
வடபகி ரதிக்கொடி வளர்த்தவா காரனை
வரைபக வெடித்தெறி தடக்கைவே லாளனை
மகிதல மிமைப்பினில் வளைத்துமீள் வீரனை

வெருவரு பணிக்குல மலைத்தபோர் மாவனை
விமலைதன் முலைக்குட மடுத்தபால் வாயனை
விபுதர்தொகு திச்சிறை யறுத்தபூ தேசனை
விதிபகை ஞானத்தனி புரக்குமோர் காவல

னிருவரை யொருத்தரென வைத்தகோ மான்மக
னெழுகடன் மடுத்திடர் படுத்ததாண் மூடிக
னிரணிய பொருப்பெழுகி யிட்டமா பாரத
னிதுபவள வெற்பென வெறித்தநீண் மேனிய

னருவரை யெடுத்தென வெடுத்தபான் மோதக
னவல்பயறு முப்பழமொ டப்பமா மோதக
னளகைகன கப்பதி நிகர்த்தசே யூரினி
லவரவர் நினைத்தது முடித்தமால் யானையே. (ரு)

## சரவணப் பொய்கை.

### வேறு.

ஆலைக்கே கரும்பொழியப் பொழிசாறு வழிதோ
ருறநிரும் வயற்செய்கை யாறுமுகத் தரசைப்

ரு. கோமான் = அர்த்தநாரீசுரர். சித்தி விநாயகனை, நினைத்ததை முடிக்கும் விநாயகர் எனவுங்கூறுப. மா = சூரபன்மனுகிய மாமரம்.

பாலைக்கேயடைகொடுத்துமொழிந்தபொய்யாமொழியைப்
பழிக்குமொரு தமிழ்க்குதலைப் பசுங்குருந்தைப் புரக்க
காலைக்கே மலர்க்கமலத் திடைக்கமல மாட்டிக்
கடும்பகற்கே பசித்ததெனக் கார்ததிகைப்பா லூட்டி
மாலைக்கே திரைக்கரத்தா லம்புலியுங் காட்டி
வைகறைக்கே சுரும்போட்டி வளர்த்தசர வணமே. (சூ)

## வேலாயுதம்.

### வேறு.

மருங்கடுத்தவர் பராவாய் வணங்கு மெய்த்தவர் தயாவாய்
மகிழ்ந்த முக்கண ரவாவாய் வழங்கு முற்சுருதி வாழ்வா
யொருங்கு கற்றவர் விளைவா யுகங்களிற் பெரியதேவா [வா
யுயர்ந்தமற்றெமது சேயூ ருறைந்த பொற்குகனை யாள்
பருங்கடற் சுவறு தீயா யகன்புவிக் குதவு தாயா
யகழ்ந்துவெற் புருவு கூரா யறந்தழைத்தபழ வேரா
யிருங்கிரிக் குமரி கூறு பிறைஞ்சுமப் பகைவர் பேறு [லே.
யெழுங்கதிர்ப் பரிதி போலா மிவன் றிருக் கைவடி வே

---

சு. "பொனபோலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே-யென்பேதை செல்லற் கிசைந்தனளே - மின்போலு-மானவேல முட்டைக்குமாறாய செவ்வர் போங்-கானவேல முட்டைக்குங் காடு" என்று **பொய்யா மொழிப்புலவர்** புகல, வேடனாய்ப் போந்தபெருமான், புலவீர்! உலர்ந்த சாலத்தும் அக்கினி பற்றுதற்கரிய சதுரக்கள்ளி யெரிந்து பொறிபறக்கின்ற பாலைவனத்தில், வேலமாத்துமுட்களெரியாது தைத்தல் யாங்ஙனம் என்று பழித்து, "விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழி-னெழுந்துசுடர் சுடுமென்று மேங்கிச்-செழுங்கொண்டல்-பெய்யாத கானகத்தே பெய்வளையும் போயினளே - பொய்யா மொழிபகைஞர் போல" என்று பாடியருளினர். என்னுஞ் சரித மிருத்தலின் "பாலைக்கே யடைகொடுத்து மொழிந்த பொய்யா மொழியைப் பழிக்கு மொரு தமிழ்க்குதலைப் பசுங்குருந்தை" என்றார். கமலம் ஆட்டி=நீராட்டி.

### வைரவக்கடவுள்.

**வேறு.**

நிலைது றந்தவனு சகர கம்புகா
நிமலர் மைந்தனைக் கமலர்தோ
ளொரிப டத்தொடுத் தொருசி றைக்குள்வைப்
பவனை நீபமா லிகையனைத்

துலைது றந்தவண் டரள வாணகைத்
தோகை வள்ளிபொற பாகனைத
தூயய செயகையாள் பவனை யாள்பவன்
கையி னுககங கணமொடுங்

கொலைது றநதவித தகர்வி ழிபபுலங
குளிர ஞாளியங் கிரளொடுங
குவல யப்பிதா வொருத லைக்கலத்
தொடுமி டிததுடிக குரலொடுங

கலைது றநதவத திரும ருஙகுடுத
துடைய மேகலை கலையொடுங
கழலசி லமபொலித் திடவ ருந்தணிக்
கரியா கஞசுகக் கடவுளே. (அ)

### கார்த்திகைத்தாயர்.

**வேறு.**

நாட்டுப பிறையூர் வளநாட்டு
நயநகர் சேயூர் நறுஙசடம்பி
னேட்டுப் புயனைத தினமபுரப்பா
ரிவனுக் கழுநீர்த் தினிதிருப்பா

---

அ. குவலயப பிதா=பிரமன். துடி=உடுக்கை. கரிய கஞ்சுகம= விஷ்ணுவின தோலாகிய சட்டை.

ராட்டுக் கொருகால் புகவகுப்பு
ராட்டுக் கருகா மருங்களித்தா
மாட்டுக் கொருமுக் காலகொடுப்பார்
வானத் துடுமா மடவாரே. (௯)

## பிரணவப் பொருள்.

### வேறு.

முறங்காது கடுத்தகடக் களிற்றயிரா வதத்தன்
முதற்பதவிக் குதவியென முளைத்ததெய்வ முளையை
மறங்காது வேலிலையிற் றழைத்தெழுகற் பகத்தை
வளவர்வளம் பதித்தோகை வாகனனைப் புரக்க
விறங்காத சடைமகுட மிறக்கியொரு செவிதாழ்த்
திருநாலா யிரமுகத்துக் கொருக்காலென் றிருக்கா
லுறங்காத வெண்கணனைச் சிறைவிடுக்க வுலகுக்
கொருபொருளா மவன்கேட்கு மோரெழுத்தின்
பொருளே. (௰)

காப்புப்பருவம் முற்றிற்று.

---

௯. ஆட்டுக்கு = மேடராசிக்கு. ஒருகால் = காற்பாகம். மாட்டுக்கு=இடபராசிக்கு. ஒருமுக்கால் = முக்காற்பாகம். கார்த்திகை முதற்காலில் மேடராசியினும், பின்முக்காலில் இடபராசியினுஞ் சந்திரன் சஞ்சரிக்கு முண்மை கூறியவாறு. கார்த்திகேயக்கடவுளின் வாகனமென்னு முரிமைநோக்கி ஆட்டினுக்குத் தங்காற்பாகத்தையும், அவரது தந்தையின் வாகனமென்னும் பெருஞ்சிறப்புநோக்கி மாட்டினுக்கு முக்காற் பாகத்தையும் கொடுத்தார் என்னும் பொருணயமுந் தோன்றுதலறிக.

௰. வளவர்வளம்பதி=சேயூர். இரு நால் ஆய் இரு அம்முகத்துக்கு எனப்பிரித்து, பெரிய நான்காகிவிளங்கும் அழகிய முகத்தினுக்கு என்றும், ஆயிரஞ் சதுர்யுகம்கொண்டது பிரமாவிற்கு ஒரு பகலாகலின், நாலாயிரம் உகத்துக்கு என்றும் பொருள்கொள்ளக் கிடத்தல்காண்க.

இரண்டாவது

## செங்கீரைப் பருவம்.



**வே**யாயி ரங்கோடி சூழ்கின்ற வெற்பெங்கும்
வீழ்கின்ற மேகத்துவாய்
வெள்ளம் பரந்துபல வுள்ளம பெருஞ்சோலை
வேரித்த மாலந்திளைத்

**தோ**யாது சாரற்க லங்கருவி யைப்புதைத்
தொளிர்வச்சி ரக்குவைசிதைத
உழுவைமரை யிரலையரி வழுவைகர டிகள்வருடை
யொழுகச் சுமந்து வழிபோய்த்

**தூ**யாறு மூன்றுமா முததிப் பெருக்கைத்
துரக்கும் பெருக்க மிதெனச்
சூரிமுகத் திரையும்வெண் ணுரையுங் கரைப்புறந்
தோறும் புரண்டு பெருகுஞ்

**சே**யாறு பாலாறு செறிகொண்டை வளநாட
செங்கீரை யாடி யருளே
சேயூர வீராறு சேயூர புயவீர
செங்கீரை யாடி யருளே. (௧)

---

**செங்கீரைப் பருவம்:**—அஃதாவது ஒருகாலை முடக்கி, ஒரு காலை நீட்டி இருகைகளையும நிலததிலூன்றித் தலைநிமிர்த்தி முக மசைத்தாடும் பருவம். இஃதைந்தாமாதத்து அறையப்படுவது.

௧. தமாலம்=பச்சிலை மரம். உழுவை=புலி. வழுவை=யானை. வருடை=ஆடு. தூய் = தூவி, ஆறும் மூன்றும் ஆம்=ஒன்பதுவகை இரத்தினங்களாகிய, உததிப்பெருக்கு = சமுத்திரவளப்பம். சூரி முகம்=சங்கு. கலோலம்=கடற்பெருந்திரை.

இந்தூர் வரைக்குழா மொன்றொடொன் றெதிர்கின்ற
தென்னக் கலோலக்குலத்
தெதிருந் திமிங்கில திமிங்கில கிலங்கோடி
யிகலிப் பொரப்போதலுங்

கொந்தூர் துழாய்மவுலி முதன்மத் திடப்படு
குரைப்பெனப பகிரண்டமாங்
கோளமும் பூச்சக்ர வாளமும் வெடிதரக்
குடிபோய் நிணைசுறவெலா

நந்தூர் கரைக்கேற வகில்சந் தனப்பிளவு
நக்கபவ ளக்குவாலு
நகைநித்தி லத்தொகையு மிப்பியு மிதந்தோடு
நரலையிற் சீரலையின் வாய்ச்

செந்தூர திருவாவி னன்குடிப் பெயரூர
செங்கீரை யாடி யருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. (உ)

இலைக்கோடு சதகோடி கற்பகா டவியோ
டிணங்கிப் பிணங்கு மகிலா
மீரப் பெருங்காடு மாரப் பெருங்காடு
மிவரும் பணிச்சா ரலவா

யலைக்கோடு பொருவுந்தி திரியக் கிராதர்தம்
மரிவை யர்குழாம் விழிபுதைத

---

உ. திமிங்கில கிலம்-திமிங்கிலத்தை விழுங்குமீன். குரைப்பு=ஒலி. நரலை=கடல். திருவாவினன் குடி=பழநி. சித்தன்வாழ்வு என்பர் நச்சினார்க்கினியர். திரு=இலக்குமி, ஆ=பசு, இனன்=சூரியன், இம்மூவரும் பூசித்தலின் அப்பெயர்த்து.

தலமந்து திரிதரப் பலமந்தி பெருமரத்
தவயம் புரக்க வலமாக்

கலைக்கோடு மொருமுக் கடாசலக் கோடுங்
கறங்கிறால் குத்தி யவிழுங்
கவிழுங் கொழுந்தாரை யாயிர முகங்கொடு
கடற்கிரு மடங்கு பொங்கிச்

சிலைக்கோ டிழிந்தோடு செங்கோடை யங்கடவுள்
செங்கீரை யாடி யருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடி யருளே. (௩)

பெருவாய் மகோததி யனைத்துந் திறப்பப்
பிறங்க க்ரவுஞ்ச கிரியும்
பேரண்ட மும்புரி மகேந்திரப் புரிசையும்
பிளவுறு வெளிதிறப்பக்

கருவாயின் மேகத்து வாகனன் புதல்வனைக்
கடவுளோ ரைச்சி றையிடுங்
காவலன் கூடங் கபாடந் திறப்பக்
கடைக்காலை வேலை யெழுநாட்

பொருவா யகம்புகப் பரிகரித் தேவிதன் [illegible]
புணர்முலையு மாறு மினப்

---

௩. கடாசலம்=யானை. இறால்=தேன்கூடு. அலைக்கு ஓடு=கடற்கு ஓடுகின்ற, பொரு உந்தி = மோதிச்செல்லும் ஆறு, திரிய = ஓட. செங்கோடை=திருச்செங்கோடு என்னுந் தலம்.

௪. புதல்வன்=சயந்தன். காவலன்=சூரபன்மன். கடைக்காலை வேலை = ஊழிப்பிரளயம். கரித்தேவி = தெய்வயானை யம்மையார். படாம்=உத்தரீயம்.

பூவையர் படாமூலையு மமுதந் திறப்பப்
புனற்கொழுந் தொழுகு பவளத்
திருவாய் திறந்தழுங் குதலைமத லாய்வாழி
செங்கீரை யாடி யருளே
சேயூர வீரா று கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. (ச)

கறையடிக் கயமெட்டு மிதயந் திடுக்கிடக்
கடலேழு மகடுகிழியக்
கதறிமே கம்பல கலங்கவுடு வுதிரவெங்
காரரா மவுலிசுழலத்

தறையடிப் பெயரவப் பாதலந் தெருமரச்
சக்ரபூ தரமுநெளியத்
தமரமூ தண்டக் கடாகங்க டப்பத்
தயித்தியர் தருக்கி ணைதரப்

பிறையடிச் சிகழிகைச் சசிநா யகன்பதம்
பெறநிறக் கவிர நவிரப்
பேரழ கெழுஞ்சிர நிமிர்த்திரு பதத்துப்
பெரும்பா ருடைந்து புடையச்

சிறையடித் திருள்கெடக் கூவுசே வற்கிறைவ
செங்கீரை யாடி யருளே
சேயூர வீரா று சேயூர புயவீர
செங்கீரை யாடி யருளே. (ரு)

---

ரு. கார் அரா=ஆதிசேடன். தரை தறை என நின்றது. சக்கிரபூதரம் = சக்கிரவாளகிரி. கடாகங்கள் தப்ப எனப்பிரிக்க. சிகழிகை=மாலை. கவிரநவிரம்=சூட்டென்னும் அணிவிளங்கும் உச்சி.

புலிக்கே யிடந்தந்த சடாத்து நாயப
புலந்தா மரைத்த லேமசன
புகழும பழஞ்சுருதி திகழுந தனிபபரம
பொருண்மாறு படட வளவிற்

றவிககே பிடித்திடுஞ சிறைவிடுத் தருளகெனச
சகலப பெருநதே வருஞ
சரணம புகப்புகப பிரமன் கிளத்தவுங்
தளளாத பொருளோது நாட

கவிக்கே தெரிககின்ற தமிழின் சுவைக்கே
கலைக்கே தமககிணையிலைாக்
கடலே குடிததோா செவிககேயு மககடற்
கடுவே குடித்தோா திருச

செவிககேயு முமைமுலைப பாலுறு கனிவாய
செங்கீரை யாடி யருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செஙகீரை யாடி யருளே. (௬)

அககாட வோநசச ராவாட வோமிடற்
ருலங கிடநதாடவோ
வாருட வோமதிக் கூருட வோதோடக்
கடிதிருச செவிகடோறு

நககாட வோபுயக கொன்றைநின் றுடவோ
நளினககை மலராடவோ
நவியாட வோநவி யஙகொதிததாடவோ
நாலடித் துடியாடவோ

மிக்காட வோகொடு வரித்தோல் கரித்தோல்
விசைந்தாட வோநூபுரம
வேதாள மொத்தெழுந் தாடவோ வறிகிலேன்
விண்ணுட மண்ணுடவெண்

டிக்காட வாதாடு புக்காடு வான்முருக
செங்கீரை யாடி யருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடி யருளே. (எ)

வேறு.

கரைதொறும் வருவன கருநிற மேதிகள்
கணடே விண்டோடக்
கடைசியர் கடையர்கண் மடையி னிலாம
லெங்கே னும்போதக்

குரைதொறு முழவெனு மதகுழி கோடிகள்
கம்பா யஞ்சாயக்
குழுமிய வறுபத ஞிமிறுகள் பாய்போ
தும்போ தம்போதித்

தரைதொறு மொளிவிடு சுடரவ னோடு
திண்டேர் திண்டாடச்
சகரர்கை தொடுமடு நிகர்மடு வாவி
யெண்கா தம்போதத்

திரைதொறு மெறிகயல் பொருத செயூரா
செங்கோ செங்கீரை

எ. தோட்டுக்கடி=தோடாகிய ஆபரணம். தோட்டுக்கு=தோட்டினைச் செருகுதற்கு, அடி=பாதம, நக்காட எனவும் கொள்ப. நவியம்=மழு. வாதாடு=காளியுடன் சண்ட தாண்டவஞ்செய்தற்கு.

திரைசையர் தொழுதெழு கிரிசைகு மாரா
செங்கோ செங்கீரை. (அ)

குவைதரு துகிரொளி நிகரொளி மேவுங்
குன்றே குன்றேய்நங்
குழகர்த மடிநடை பழகி யுலாவுங்
கன்றே கன்றேயஞ்

சுவைதரு மழலையின் மொழிமறை நாறு
மென்தா யென்தாயென்
றுறுபரி புரவொலி செவிகலி தீர
வந்தாய் வந்தாய்பண்

டவைதரு முனிவரு மமரரும் வாழ
நின்றாய் நின்றாயென்
றகமனன் மெழுகென வுருகி விடாமன்
முன்போ டன்போடுஞ்

சிவைதரு முலையமு தலையெறி வாயா
செங்கோ செங்கீரை
திரைசையர் தொழுதெழு கிரிசை குமாரா
செங்கோ செங்கீரை. (க)

கிளைபடு முடுகுல மொடுமுகில் போலு
மென்பூ வுங்காவுங்
கிளிபல குயில்பல வளிபல பேடு
னுங்கூ டுங்கூடுங்

---

க. குன்று ஏய் நம் குழகர் தம்மடி=கயிலைமலைக்கண் வீற்றிருக்கும் எமது கடவுளாய சிவபெருமானது மடியின்கண். அம் சுவை எனப்பிரிக்க. சிவை=உமாபிராட்டியார்.

தளைபடு கழனியி லுழுநர்கை யார
வுந்தே ரும்பா றுஞ்
சததள மலர்குவ ளைகண் மலர்கொடி
சங்கோ டுங்கோடுந்

துளைபடு மதகுழி பொழிமுலை மேதியி
னம்பா லுஞ்சேலுஞ்
சொரிமத களிறென வருமிள வாளைக
ளுஞ்சே ருஞ்சாருங்

திளைபடு வளமழ கொழுகுசெ யூரா
செங்கோ செங்கீரை
திரைசையர் தொழுதெழு கிரிசைகு மாரா
செங்கோ செங்கீரை. (க௦)

செங்கீரைப்பருவம் முற்றிற்று.



க௦. அளி=வண்டு. தளை=பயிர். சததளமலர்=தாமரைப்பூ. திரைசையர்=சோழராசர். கிரிசை=கிரியின்மகள், பார்வதிதேவியார்.

மூன்றாவது

# தாலப்பருவம்.



**வேறு.**

மகரப் பரவைத் திரையிற் பாய்திரை
மானப் புனிதசசெவ்
வானீ ரிதழித் தேனீ ரலையின்
மலையப பலகாலு

முகரக் கனகக் கனகிங் கிணிநா
மூரலத் தழுவுநிலா
முறுவற் செமமுக யாறினு மைம்முக
முத்தம் பெறுநேயா

சிகரத் திகிரிக் கிரியுந் திசையிற்
கிரியுஞ் சரியக்கார்
திரியப் பொருவோ ரிரியப் புவியுஞ்
சேடர் படாடவியுந்

தகரக கடவுந் தகரே றுடையாய்
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. (க)

---

**தாலப்பருவம்:**—அஃதாவது ஐவகைததாயரும, மடிததலத்தும் மணித்தவிசினுந் தொட்டிலினுங கிடத்தி நாவசைத்துப்பாடும பகுதியைக கூறும பருவம. தால என்னு மோசையோடு தொட்டிலை யாட்டிப் பாடும பருவம எனவுங் கூறுவாருமுளர். தால்=நா. இஃது எட்டா மாதத்தில் இயமபப்படுவதாம்.

க. இதழி=கொன்றை. திகிரிக்கிரி=சக்கரவாளகிரி. தகரேறு=ஆட்டுக்கடா. சமரம்=போர்.

வாளுஞ் சங்கு மிளங்கொடி வள்ளையும்
வள்ளப் பவளமும்வால்
வளையுங் கிளையும் மிளைய குரும்பை
வடமும் படமுந்தா
சாளுங் கொம்பு மரம்பையு மலவனு
மம்புய முந்தலைநா
ளென்பிற் கனலொரு மென்பிற் குதவி
யழைக்குங் கவிநாவாய்
தோளுந் தொங்கலு மாறிரு கரமுந்
தொடியுஞ் சிறுமுறுவல்
சொரிகனி வாயுந் திருவரை வடமுந்
தொடுகிங் கிணியொலியுந்
தாளுந் தண்டையு மழகிய பெருமா
டாலோ தாலேலோ
சமர மயூரா குமர சேயூரா
தாலோ தாலேலோ. (உ)

காலைத் துயிலைப் பெடையோ டொருவிக
கடிமறு கிறசிறகைக்
கனலக் காயிள வெயிலிற் கோதிக்
கழனித் தலைபகலே

---

உ. கொடிவள்ளை = வள்ளைக்கொடி (காது), சஙகு=நெறறி, வள்ளப்பவளம்=(வாய்), வாலவளை=சங்கு (கழுத்து), கிளை=மூங்கில் (தோள்), வடம்=ஆலிலை (வயிறு), கொம்பு = (இடை), அரம்பை=வாழைத்தண்டு (தொடை), அலவன்=ஞெண்டு (முழந்தாள்). 'என்பிற் குகவியழைக்கும்' என்பது முருகப்பிரான் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாராயவதரித்துத் திருமயிலையில் எலும்பைப் பெண்ணாக்கிய சரிதத்தை உணர்த்திற்று. கவி=தேவாரத்திருப்பதிகம். அரைவடம்=அரைஞாண். ௩. பெடை=பெண் அன்னம். ஒருவி=நீங்கி.

பாலைக் கவுரி தரப்பரு கிப்புன
லாடிக் களியன்னம்
பனியா லைச்சோ லைக்கிடை யடையும்
பாலித் திருநாடா

வாலைக் கமலத் தவரைப் பிரியா
வரிபிர மாதியரோ
டண்டமொ ராயிர கோடியு முண்டுண்
டாரவ ளர்க்குமறச்

சாலைத் தலைவி தவக்குல மணியே
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. (௯)

பாயா றெனுமத் தொகுதிக் கிறைவிப்
பகிரதி செவ்விமுகப்
பனிமதி மண்டல மாயிர மிசையிற்
பசியகொ டிக்கமையாப்

போயா றடியுந் துவையா வனசப்
போதீ ராயிரமும்
பூவொடு பூவைத் தென்ன வழுத்தும்
பொலிதண் டைத்தாளா

தீயா றும்படி யேழ்கட லொண்டு
திரண்டெழு கொண்டலெனத்

---

௯. கமலத்தவர் = இலக்குமியும் சரஸ்வதியும். அறச்சாலைத் தலைவி=முப்பத்திரண்டறங்களையும் நடத்தற்காக காஞ்சியில் தருமசாலை வைத்திருந்த காமாக்ஷியம்மையார்.

தெள்ளமு தப்பெரு வெள்ள மடிக்கடி
திருமுலை யீராறுய்த்

தாயா றும்பொழி வாயா றுடையாய்
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. (௪)

கைத்தடி கொண்டுறி பாற்குடி கொண்ட
கடம்புரை செய்துபுரைக்
கால்வழி யிற்பொழி பால்வழி யிற்கக
னத்து நிலாவழியே

கொத்தடி விண்ட மலர்க்குமு தத்திதழ
போலிதழ் விண்டளவிற்
கோவியர் கண்டிரு காவி சிவந்து
கொணர்ந்திரல கட்டியநாண்

மத்தடி பட்டவர் தங்கை குயத்தினும்
வைகை நதிக்கரைவாய்
மாறடி பட்டவர் வீறு புயத்தினு
மாறி யடிக்கடிபோய்த்

தத்தடி யிட்ட சதங்கை யடித்தல
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. (௫)

---

௫. தடி=கோல். கடம்புரை செய்து = (பாற்) குடங்களைத் துளைசெய்து. காவி=நீலோத்பலம்; இங்கு கண்ணுக்கு உவமையாகு பெயர். மாறு=பிரம்பு.

வேறு.

சீர மனத்தவர் வாழ்வாய் நோவாய் வீழாமே
யேம புரத்திரு வாரு ராரு ராருமே
தார விடக்கட னீரோ டேகு ரோடாமே
சோரி யுறப்பொரு வேலா தாலோ தாலேலோ
பார வயற்றுயி ருகூர் கால்வாய் பால்பாயப்
பாயெரு மைக்கதி யாலே மேலே சேலேபோ
யார முழுக்கழி சூழ்சே யூரா தாலேலோ
வாறு முகப்பெரு மானே தாலோ தாலேலோ. (சு)

சோலை வனக்கர ளோடே தேர்கா லாளோடே
தோளெனும் வெற்பிரு பாரு ருனன் மாருன்
வேலை யுரத்தெறி கோலே மாலே போலாவான்
மேன்மரு கப்பெரு வேலா தாலோ தாலேலோ
மாலை யெனத்திரி மீரு மீதே ருருமே
வாரி யலைத்தலை சாறே ருமே மாழுமே
யாலை பலப்பல பாய்சே யூரா தாலேலோ
வாறு முகப்பெரு மானே தாலோ தாலேலோ. (எ)

வேறு.

வருண னுக்குலக நிகர் தரக் கமல
மலர்மடுத் தமடு மாநீர்போய்
வயல்புகப் புகுது கயல்களித் துகள
வயமருப் பெருமை காவூடே
கருண முக்கரட களிறெனச் சிதறு
கதிபடக் கதலி தேமாவீழ்

சு. ஆறுமே=அழியாமல். நாகு=சங்கு. ஆரம்=முத்து.
எ. இருபாருன் ஆறுன்=இருபதானவன் (இராவணன்).

கனிகு வித்தபல குவைது வைத்தளறு
கமழு மிக்கபிறை யூர்நாடா
தருண முத்தமுலை மலைக டுத்தமதி
சயில புத்திரித னோர்பாலா
சலதிவட்டமுழு தலற நெட்டவுணர்
சமரில் விட்டெறியும் வேல்வீரா

வருண வப்பரிதி கிரண மொத்ததிரு
வழகு டைக்கடவு டாலேலோ
வறம்வ ளர்த்தருளு மிறைவி பொற்புதல்வ
னறுமு கக்குரிசி லாலேலோ. (அ)

மடையை முட்டுவன கரைநெ ருக்குவன
மழுவு ருக்குவன மாநீர்போய்
வயல்க லக்குவன கதிர்வ ணக்குவன
வளைது ரத்துவன தேனேசூழ்

தொடையை யெற்றுவன வளியெ ழுப்புவன
சுவைவி ழுத்துவன வானூடே
சுடர்வெ ருட்டுவன வெழிலி தத்துவன
துளியி றக்குவன கீழ்கால்வா

யிடையை யெட்டுவன கமுக லக்குவன
வெருமை மொத்துவன சேலேபா
யிருபு றத்துவள மையுமி குத்தளகை
யெனநி கர்த்தவொரு சேயூரா

---

அ. தருணம்=இளமை. அருணம் = மிக்க சிவப்பு. உருக்கு வனம்=எஃகின்நிறம். வணக்குவன=வளைப்பன. துளி=மழை.

வடையு மப்பரிதி கிரண மொத்ததிரு
வழகு டைக்கடவு டாலேலோ
வறம்வ ளர்த்தருளு மிறைவி பொற்புதல்வ
னறுமு கக்குரிசி ருலேலோ. (௯)

இமர விக்கிரண மெனநி லத்துமிடி
யிடிப டுத்துவெளி மீண்மிறு
லெறிதி ரைத்திரளு மிருக ரைப்புரள
விளம ரப்பொழிலு மேயாமே

பமர வர்க்கமல கரிமு ழக்கிவிழு
பலம லர்க்குவையு நீரோடே
படுக டற்பெரிய மடும டுத்துரக
படநெ ளித்தொழுகு பாலாறு

தமர நெட்டுவரி மகர மச்சமொடு
தடந திப்படுக ராருயே
தவழு மிக்ககுரி முகமு கத்துவிடு
தரள வெக்கரிடு சேயூரா

வமரர் பொய்ச்சிறையு மவுணர் மெய்ப்பொறையு
மறவ றுக்குமுனி தாலேலோ
வறம்வ ளர்த்தருளு மிறைவி பொற் புதல்வ
னறுமு கக்கடவு டாலேலோ. (௧௦)

தாலப்பருவம் முற்றிற்று.

---

௧௦. ரவிச்கிரணம்=சூரியனது கிரணம். பமரவர்க்கம்=வண்டு களின் கூட்டம். மலகரி=தேவாரகம் முப்பத்திரண்டனுள் ஒன்று. தமரம்=ஒலி. எக்கர்=குவியல். படுகர்=பள்ளம்.

நான்காவது

## சப்பாணிப் பருவம்.



பாரங்க மீரேழை யுஞ்சுமக் கின்றவப்
பணிராச ராச மகுடப்
பந்திபெய ரத்திசைத் தந்திபெய ரப்பருப்
பதகோடி கோடி பெயரச்

சூரங்க மாவடிப் பெயரவீ ரைந்துமா
ருதமுந் துரந்து வீசச்
சுடராழி யும்பெயர வந்துபே ரமரரொடு
தொல்வரைக் கரசு பெயர

வோரங்க மாயிரமு கப்பாணி தலைக்கொண்
டுலாவு சூலப் பாணிதன்
னுவகைக்கு மாரமுற் கரகபா ணிக்குமுடி
யுடையப் புடைக்கும் வீரா

சாரங்க பாணிதன் மருகசே யூர்முருக
சப்பாணி கொட்டி யருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டி யருளே. (க)

வங்கக் கடற்சூழு மெழுதீ வையுந்தெய்வ
மாவின்கனிக்காவலாய்

க. **சப்பாணிப்பருவம்**:—அஃதாவது காலை மடக்கிக் கையுடனே கைகொட்டும் பருவம். இது ஒன்பதாமாதத்திற்கூறப்படுவது. வரைக்கரசு=மேருமலை. ஆயிரமுகப்பாணி= கங்கை. கரகபாணி= பிரமன்.

வலம்வந்த செந்தா மரைப்புலத் தண்டையும்
வயிரச் சதங்லை நிரையுந்
திங்கட் கதிர்ப்பரிதி வெங்கதிர் வெருண்டண்ட
கூடந் திடுக்கிடுமணித்
திருவரைக் கிங்கிணியு மொருபோது மாறாது
செய்கைநகர் வைகு மதலாய்
துங்கத் திருக்கூட லாடிறைவ னார்முனந்
துறைபெறச் சொற்றபொருளின்
றுன்மையுணா யேழெழி னன்மையுணா யீதெனுஞ்
சோதனைக் குலகு காணச்
சங்கத் தமிழ்ப்பலகை யேறுபுல மைத்தலைவ
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டி யருளே. (உ)

பேழைத் திரட்கொண்ட வெண்டரள பந்தியைப்
பெய்யக் கவிழ்த்த பரிசிற்
பெருமுத்து குத்தவெண் சங்கு நூறாயிரம்
பின்பிடித் தொருவாளைபோய்க்
கூழைப் பிறைக்குவளை சூடுமக் கடைசியர்
குழாங்கண்டு விண்டு வெருவக்
குழுமிக் கரைச்சென்று தவழத் துரக்கின்ற
கொள்ளைக் குளத்த ருகெலாம்

---

உ. தெய்வமாவின்கனி = நாரதரால் சிவபெருமானிடத்துக் கொடுக்கப்பட்ட தெய்வத்தன்மையுடைய மாம்பழம். உரை ஏழெழில் = சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மர் இறையனாரகப்பொருட்குச்செய்த உரைகளுள்.

௩. பேழை = பெட்டி. கூழை = வளைந்த.

வாழைக் குலைக்குலமு மஞ்சளிஞ் சிக்காடு
மதுரக் கருப்படவியும்
வளவயற் சாலியும் வேலியுஞ் சதகோடி
மடியப் படிந்து சிதறத்

நாழைக் குலக்கனி கனிந்துசொரி சேயூர
சப்பாணி கொட்டி யருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டி யருளே. (௯)

நீளவட் டப்பரவை யோரேழை யுந்தனது
நிழலே கவிப்பவிருபா
னீலக் கலாபம் பரப்பியிப் புவியெலா
நெளியநின் றகவிநேமி

வாளவட டத்தையு மெட்டுநா கத்தையும்
மதநாக மோரெட்டையும்
வைக்கும் பணுமவுலி நாகமிரு நாலையும்
வாய்கொண்டு மூதண்டமாங்

கோளவட் டக்கிரண மாயிரமு. முதுகிடக்
கொத்துமா ணிக்கமுதிரக்
கோபத்தொ டுதறியுஞ் சாபத்தொ டெழுகின்ற
கொண்டலைக் கண்டளவிலாத்

---

௪. அகவி=கூத்தாடி. எட்டுநாகம=அட்டதிக்குமலை. மதநா கம்=அட்டதிக்குயானை. மௌலிநாகம் = முடியையுடைய அஷ்ட சர்ப்பங்கள். சாபம் = வில். மயில்கொண்டலைக்கண்டு நடித்தலை, “என்னையூர்ந்தருள் சுடர்வடி யிலையவேற் பெருமான்-றன்னை நன் மருகெனப்படைத் தவன்றன தூர்தி-யன்ன தாமெனுங் கேண்மை யா னளிமுகிற் குலத்தைக் - கன்னி மாமயில் காண்டொறுங் களி சிறந் தகவும்” எனப் பிற்காலத்தவராய ஆசிரியர் **சிவஞானயோகி** களுங் காஞ்சிப்புராணத்துட் கூறியவாற்றுனறிக.

தாளவட் டத்தினடி மாயூர சேயூர
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. (௪)

ஒப்பாரு மற்றகொற் றப்பரவர் பேதைய
ருவப்பினொரு வர்க்கொ ருவர்போ
யுவரிக கரைத்தலைச சிற்றிலை யிழைத்தந்தி
யூருழைப் போது போகிற்
கப்பாரு முத்தரும பியபுன்னை காள்சுரும்
பனைகாண் மடற்கை தைகாள்
காணு தெமைத்தேடி னுலெங்கண் மகவுங்கள
கையடைக் கலமா கையான்
மெய்ப்பாணி மஞ்சனமு மிடுமின்வெண் ணீறிடுமின்
விழுநிலக் காப்பு மிடுமின்
மெதுமுத் தங்கொடுமின் வருகவென் றெதிருமின்
விருமபுமம் புலியை யழைமின்
சப்பாணி கொட்டுமி னெனுஞ்செய்கை நகராளி
சப்பாணி கொடடியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டி யருளே. (ரு)

மதகோடி யாயிரங் கோடிசெஞ் சேல்புகுத
வயமருப பெருமைக்குழாம்
வயலிற் கிடங்தனவு மாடவீ திக்கடைய
வரவிரு லைப்பொருதுபோய்

ரு. அநதி=மாலைக்காலம். போதுபோது = போகின்றகாலம்.
கப்பு=கொம்புகள். கைதை=தாழை. சு. மதகு ஓடி என்க.

விதகோடி கண்டலை யலைக்கின்ற சேயூர
வெய்யகன விக்தேவனும்
வெண்ணிறக் கங்கையில் விடுத்தலுஞ் சரவண
மிசைச்சென்று வளர்கின்றநாட்

பதகோடி வேதங்கண் மணநாறு மாறுசெம்
பவளத்து ளாறுமீனப்
பணைமலைத் துணைமுலைப் பாலருவி பாயப்
பசுந்தாம ரைத்தொட்டில்வாய்ச்

சதகோடி பானுவொத் தழகெழுத் துயில்குழவி
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி சுத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. (கூ)

பௌவத் திறங்காத வைகைப் புனற்கும்
படுங்கனற் குங்கவுரியன்
பாதகக் கூனுக்கும் வெப்புக்கு மரசைப்
பதிக்கே பணைக்குமுனிவிற்

கௌவத் துரக்கின்ற வெவ்வரா வின்கொடுங்
கடுவுக்கு மக்கடுவிறைற்
காயத்து ளார்விடக் காயத்தை வெந்தழல்
காயமே மென்பிறுக்குங்

---

எ. வைகை, கடலிற் சலக்காத சிறப்புநோக்கி, பௌவத்திறங் காத வைகை யென்றார். காயத்தை=பூம்பாவையின் உடலை. சுருதி யடவி = வேதாரணியம். புத்தனார் = புத்தநந்தி. இந்நூலாசிரியர் தந்நாமமுந் தோன்ற, ஞானசம்பந்த மூர்த்தியாய்வந்த முருகனைக் "கவிவீர" என்றார்.

தெய்வப் பெருஞ்சுருதி யடவியிற் கதவுக்கு
நெறியிலாச் சிறுபுத்தனார்
திண்சிரத் திற்குமுமை திருமுலைப் பாலருத்
திருவாய்ப் பசுந்தமிழினைச்

சைவத்தை யறிவித்த கவிவீர சேயூர
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. (எ)

மூகடுகிழி வித்தசூத சிறுகுரல் செவிப்புகுது
முற்றாள மொத்தெழுநிலா
முறுவல்பொலி யக்குழுகு மறுவர்முலை யிற்சுதக
முப்போதும் விட்டொழுகுபா

லகடுநிமி ரப்பருகி யொருசரவ ணத்தமரு
மக்கால முக்கணுடையா
ரமலையை யெடுத்தியென மலைமகளெடுத்துவளு
ரத்தாவ ருத்தியரசே

பகடுகண் மருப்பொடிய வடமதுரை யிற்பெருத்து
பற்றுத றப்பொருதுநேர்
பணைமரு தறப்பொருது துணைபெறு பிணைக்குநிகர்
பற்பேயி னைப்பொருதுவோர்

சகடுபொரு சிற்றிடையன் மருகபுருகடவுள்
சப்பாணி கொட்டியருளே

---

அ. அறுவர் = கார்த்திகைப் பெண்கள். சுதகம் = முலைக்கண். பகடு = குவலையாபீடம் என்னும் யானை. மருது = மணிக்கிரீவன் நளகூபரன் என்னும் குபேர புத்திரர்கள் நாரதரின் சாபத்தால் மரமாய் நின்ற வரலாற்றைக்குறித்து நின்றது.

தவளமதி யக்கவிகை வளவநக ரிக்குமர
சப்பாணி கொட்டியருளே. (அ)

வேறு.

மகரசல திப்படியின் மலரடி நினைப்பவர்
மனத்தா மரைப்பரிதியே
மறமகள் விழிக்குவளை கயமகள் விழிக்குவளை
மைப்போ தினுக்குநிலவே

நிகரவச லப்புதல்வி முகிழ்முலை முகட்டிடு
நிறத்தர வடத்தரளமே
நிருதரென நெட்டுலகு பொருதுகவ ரத்திகிரி
நெருப்பா றுவித்தபுயலே

சிகரகிரி விற்கைகொடு திரிபுரமெ ரித்தவர்
திருக்கூ டுவிட்டசுடரே
திகிரியன் வயக்குலிச னிரணிய கருப்பனிவர்
செப்பா ரணத்துமுதலே

சகரமடு வைக்கனலு சுடர்விடு மயிற்கடவுள்
சப்பா ணிகொட்டியருளே
தவளமதி யக்கவிகை வளவநக ரிக்குமர
சப்பா ணிகொட்டியருளே. (கூ)

வளைபடு கடற்புவியி னுயிர்படு பிறப்பொழி
வழிக்காக வைத்த துணையே

---

க. மறமகள் = வள்ளி யம்மையார். கயமகள் = தெய்வயானை யம்மையார். நிலவு = சந்திரன். திருக்கு ஊடு = நெற்றிக் கண்ணிடத்தினின்றும். அத்திகிரி = அத்தக்கிரவுஞ்சமலை. கனலுதல் = வறளச் செய்தல்.

மதுரமுரு கக்கவிதை மகிழ்தரு திருப்புகழ்
மலர்க்கே மணத்த மணமே

திளைபடு தமிழ்ச்சுவையி னிருபதம் வழுத்திய
திறப்பா வலர்க்கு நிதியே
திசைமுகனை யெற்றியவன் மகனை யடிமைக்கொடு
செவிக்கே தெளித்த பொருளே

களைபடு துயர்ப்புணரி யினுமமரர் ரைக்கனக
கரைக்கேற விட்ட கலமே
கைலையர சற்கரசி பகிரதி யிவர்க்கினிய
கட்டாம ரைக்குண் மணியே

தளைபடு கடப்பமல ரளிகுல முழக்குபுய
சப்பாணி கொட்டி யருளே
தவளமதி யக்கவிகை வளவநக ரிக்குமர
சப்பாணி கொட்டி யருளே (க௦)

பாணிப்பருவம் முற்றிற்று.

---

ஐந்தாவது

## முத்தப்பருவம்.



நத்துக் கொழித்துத் திங்கட் கொத்து
நகுந்தள வுக்கொத்து
நற்கீ ரத்துக் கொத்துக் குந்த
நறுந்தா திற்போதிற்

கொத்துக் கொத்துப் பொலிவாள் கொழுநற்
கொத்தும் பைந்துளவக்
கோவிற் கொத்துக் குலிசற் கொத்துக்
குலவுந் திருவுருவாய்ச்

சித்துக் கொத்துப் பத்துத் திக்குஞ்
செறியவி ருள்பொதுளச்
திண்சூ ழத்துக் கொத்துப் பொருவோன்
சிதறப் பொருழ்வீரா

முத்துக் கொத்துப் பத்திக்கனிவாய்
முத்தந் தந்தருளே
முருகா செய்கை முராரிதன மருகா
முத்தந் தந்தருளே. (க)

---

**முத்தப்பருவம்** :—அஃதாவது குழவியினது வாய்முத்தத்தை அவாவி தாயர் கூற்றாகக் கூறும் பருவம். இது பதினோராவது மாதத்திற் கூறப்படுவது.

க. கீரம்=பால். தளவு - முல்லைப்பூ. குந்தம்=குருந்தமரம். பொலிவாள் = (சரசுவதி.) பொருவோன் = போர்செய்த சூரபன்மன். பைந்துளவக்கோ=திருமால். குலிசன்=இந்திரன்.

வித்தே வித்தும் பழனத் தளையின்
வெள்ளிக் குழுமுளையின்
வெண்சிறை யன்ன மிதிக்குந் தோறும
வெருண்டெழ வாணர்குழாம்
பத்தே யெட்டே யொருகைக் கேனும்
பணில மெடுத்தெறியப்
பால்வெண் டரள மேல்விண் டுதிரும்
பாவித் திருநாடா
வத்தே வர்க்குந் தொன்முனி வர்க்கு
மனைந்தற் கும்புவனத்
தட்ட திசைக்கா வலவர்க் கும்வே
றசல சலத்திற்கு
முத்தே வர்க்குந் தேவன் புதல்வா
முத்தந் தந்தருளே
முருகா செய்கை முராரிதன் மருகா
முத்தந் தந்தருளே. (௨)

பாவாய் குதலைக் குயிலே மழலைப்
பசலை மடக்கிளியே
பவளக் கொடியே தவளத் தரளப்
பணியே கண்மணியே
பூவா யெனவந் திமயத் தரசன்
புகழத் திகழுமிளம்
புதல்விக் கருமைப் புதல்வா பெருமைப்
புவனத் தொருமுதல்வா

௨. பழனம்=கழனி. தரளம்=முத்து. அசலசலம்=மலையுங் கடலும். முத்தேவர்=பிரமன், விட்டுணு, உருத்திரன்.

தேவா திபனே கருணா லயனே
சிவனே யதத்தவனே
சேயே சுருதித் தாயே தமிழின்
றிருவே யொருபோது
மூவா முதலே மூவிரு முகனே
முத்தந் தந்தருளே
முருகா செய்கை முராரிகன் மருகா
முத்தந் தந்தருளே. (௯)

கொற்றத் தழுவா புயத்தி லுழத்தியா
கொங்கைக் குவடுபொரக்
கூடிக் கூடிப் புலவிக் கலவிக்
குலாவி யுறங்குதலு
நிற்றப் புலரி யெழுப்பி யழைக்கு
நீர்நிறை யோடையினு
நீலத் தகழி யினுங்கரை யேறி
நிலாவெண் சங்கமெலாரு
சுற்றப் புரியின் புரிசையும் வீதித்
தொகுதியு மாவணமுங்
தொடுகா வணமும் பிறங்கிட டாங்கவா
தோரண மணிவாயின்
முற்றத் ததிருந் தொண்டைநன் னாடா
முத்தந் தந்தருளே
முருகா செய்கை முராரிகன் மருகா
முத்தந் தந்தருளே. (௰)

௯. நிததம் எனபது எதுகை நோக்கி நிற்றம என்றாயது. ஆவணம்=கடைத்தெரு ; காவணம=நடைப்பந்தர்.

வேறு.

நவக்குஞ் சரமே செறிவனத்து
நறிய முருக்கே பசுங்காந்த
ணனைத்தண் போதே மாதளையே
நாறுங் குமுதச் சீரிதழே
யுவக்குங் கொடித்தா மரைத்தோடே
யுருவத் திலவே பருவத்தா
லுடலம் பழுத்த வீர்விழியே
யொழியாக் கொவ்வைக் கொழுங்கனியே
நிவக்கும் பொருப்பி லசோகமே
நிறக்குங் குலிகக் குழம்பழகே
நெறிசெம் பவளத் தொளியேயென்
றிவைக ளனைத்து நிரைத்தொன்றாய்ச்
சிவக்கும் படியே சிவப்பொழுகுந்
திருவாய் முத்தந் தருவாயே
செய்கைக் கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. (ரு)

எஞ்சா முகிற்கு ளிரண்டுமுகி
லெறிதேன் கடலும் பாற்கடலு
மிருபக் கமும்போய் முகந்துமுகந்
திறைப்ப நறைப்பைந் துழாய்மௌலிப்
பஞ்சா யுதனென் றுருகேழு
லும்பே ரண்டப் பழனத்துப்

ரு. விழி=வீழிப்பழம். குலிகக்குழம்பு=சாதிலிங்கக்குழம்பு.

பழைய வேதச் சுவையவிதைக்
கரும்பா யமைத்துப் பணைத்தெழலும்
விஞ்சா ரமுதப் பிறைவாட்கொண்
டிறையோ னறுப்ப வெடுத்துவட
மேருச் செக்கூ டிருநான்கு
கரியால் வெய்யோன் றிருப்பவிழுஞ்
செஞ்சா றிழைத்த தெனுமழலைத்
திருவாய் முத்தந் தருவாயே
செய்கைக் கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. (௬)

காம்பான் மலரப் படுங்கடவுட்
கமல மிரண்டென் றதிசயிப்பக்
கனுலுந் தடந்தோ ளுடன்கடகக்
கரத்தா விருமுத் திருமேனி
யாம்பா லகரா முனைப்புனைப்பூ
ணாகத் தெடுத்தாங் கொருகுழவி
யாகத் தழுவி யவளுங்கை
யடங்கா வகையோ ரொழுகியநாட்

௬. பணைத்து எழலும்=வளர்ந்து எழுதலும். வெய்யோன்=சூரியன். முகிற்குள்=எழுமேகங்களுக்குள்; இரண்டு முகில்=சம்வர்த்தம், புட்கலாவர்த்தம். இருமுகில்களும் பாற்கடலையுந் தேன்கடலையு மொண்டு பெய்ய, திருமாலாகிய ஏனம் உழுத அண்டமாகிய வயலுள் வேதச்சுவையாகிய கரும்பை நட்டு, அந்தக்கரும்பு வளராநிற்க, பிறையாகிய அரிவாள் கொண்டு இறைவன் அறுத்துவிட அதனையெடுத்துச் சூரியன் மேருமலையாகிய செக்கிலிட்டு அஷ்டதிக்கு யானைகளை அதிற்கட்டி ஆட்ட, அதனின்று மொழுகுகின்ற இனிய சாற்றைப்போன்ற மழலைச் சொற்களை வசனிக்கும் வாய் என்பது கருத்து.

பாம்பா லணைய வணைத்துயிலும்
பரஞ்சோ தியைவிட் டிங்குமொரு
பசும்பாற் கடலோ கிடப்பதெனப்
பனிமா லிமயத் துமைமுலைக்கட்

டெம்பான் மணக்கு ஞ் சரவணத்தாய்
திருவாய் முத்தந் தருவாயே
செய்கைக் கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. (எ)

மருவாய் வனசத் திறையவனைச்
சிறையுட் பிணித்த பருவத்தே
மகரக் கடலே முடித்தபெரும்
புவனக் குருவாய் வருவார்க்குங்

குருவா யம்பொற் செவிதாழ்த்துக்
குடிலை யுரைக்கும் படியுரைத்த
கொற்றங் கேட்டெம் பெருமாட்டி
நித்தங் களிக்குங் குலவிளக்கே

யருவாய் மதனைப் பொருவார்க்கு
மறியாப் பொருளை யறிவித்த
வமிர்தப் பவள மிதுவோவென்
றருகே தனது முகநீட்டித்

திருவாய் முத்தந் தருவாட்குத்
திருவாய் முத்தந் தருவாயே

---

அ. புவனக்குருவாய் வருவார் = சிவன். குடிலை=பிரணவப் பொருள். கொற்றம்=வெற்றி. மதனைப்பொருவார்=சிவன்.

செய்கைக்கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. (௮)

வேறு.

பூமாவின் மனையனைய கனைகடலி லளறுபடு
புலவினொடு பயில்வனவு முத்தமோ
போராட வுபயவிட வரவமவை தொடரவுடல்
புலருமதி பொதிவனவு முத்தமோ
வாமாயி தெனவமார் பதுமருவு முகிலிடியின்
மடுவிலெரி பொரிவனவு முத்தமோ
மாருத வஞ்சரண ஞிமிறுகளின் முளரிநறு
மலரின்மிதி படுவனவு முத்தமோ
வாமாவி னவனையொரு குழவியென வும்ழகழையி
னடவியனல் சுடுவனவு முத்தமோ
வாளுது மருவினைவ ரெவரெனினு மவருயிரை
யடுகரியில் வருவனவு முத்தமோ
தேமாவி னொருகனியை நுகரநிலம் வலம்வருகை
செயுமெனது குகதருக முத்தமே
சேயூர வரிமருக கிரிவனிதை தருமுருக
திரிபதகை சுததருக முத்தமே. (௯)

பூவாதி யுலகடைய வடையுமிரு ளுடையவொளி
பொழியுமரு கமலமலர் வத்திரா
போகாத திருவதிக மருவுமக பதிபுகுத
புகலுமிள நிலவுசொரி சத்திரா

---

௯. புலவு=புலால். உபயவிடவரவம்=இராகு கேது. முளரி= தாமரை. ஆமாவினவனை=சிவபெருமானை.

கோவாதி விடைவலவர் படைமழுவின் வலவர்கிரி
குமரியொரு தலைவரவர் புத்திரா
கோடாத வறநெறியி னறுவகைமை லிபியைநவில்
குணநிபுண ரருணகிரி மித்திரா

மாவாதி யதிகரிபி னிரதவித மிகவாட
மதவுத்தி விகடமத மத்தமா
மாருத வனிகமுட னவுணர்கட லெதிரவதிர்
மறிகடலி னடுவுமொரு முத்தமா

தேவாதி பதிகுமர னமரரிவர் பலருமுறை
சிறையைவிடு துரைதருக முத்தமே
சேயூர வரிமருக கிரிவனிதை தருமுருக
திரிபதகை சுததருக முத்தமே. (க0)

முத்தப்பருவம் முற்றிற்று.

---

க0. அறுவகைமை லிபி = ஆறெழுத்து (நமஃகுமாராய) என்னும் சடக்கர மந்திரம் என்பர் நச்சினார்க்கினியர் (பத்துப்பாட்டு- பக்கம் உஅ - திருமுருகாற்றுப்படை.)

ஆறாவது

## வருகைப்பருவம்.



மிக்கே ருழும்பொற் பகடடித்துங்
கயலைத் தடிந்துங் குருகடர்ந்தும்
வேலிப் புறத்து வெறுத்துவெறுத்
தெறியக் கிடந்த சதகோடி

இக்கே நெரித்துஞ் சுரிமுகங்க
ளெருமைக் கருந்தாட் படவுடைந்து
மெய்ப்பாய் வாளைக் கமுகலைத்து
மிலைப்பூங் கமுகான் மதியலைத்துந்

தொக்கே மழையப் பொழில்கழித்துஞ்
சுரும்பாற் கமலக் களைகளைந்துஞ்
சுடருஞ்செந்நெற் காடறுத்துஞ்
சொரியச் சொரியக் கடையர்குழாஞ்

செக்கே தாளக் குவைகுவைக்குஞ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாண் மயிற்பெருமா
டெய்வப் பெருமாள் வருகவே. (௧)

---

**வருகைப்பருவம்** :—அஃதாவது குழந்தையை வருகவென்று தாயர் அழைக்குங் கூற்றாகப் பாடும் பகுதி. இது பன்னிரண்டா மாதத்திற் கூறப்படுவது.

க. மிக்க ஏர் என்பன மிக்கேர் எனநின்றன. பகடு=எருமை. குருகு=பறவை. இக்கு=கரும்பு. மழை=மேகம்.

பம்பிற் கழியே செழியவித்திப்
பாயும் புனலு மெனக்கொணர்ந்து
பகடுங் கொழுவுந் தொடாமே
பலபுள் விலங்கும் படாமே
யம்பொற் களையுங் களையாமே
யருங்கண் டகத்தால் வளையாமே
யலைக்குங் குறும்பொன் றிலாவுலகி
லரசன் பரிசில் கரவாமே
யும்பர்ப் புயல்வேட் டுழலாமே
யுமண ரமைத்த வுப்பினுழு
முழவர் விளைப்ப விளைசெந்நெற்
குவையும் வெள்ளி யொளிக்கிரியுஞ்
செம்பொற் கிரியு மெனப்புரஞ்சூழ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாண் மயிற்பெருமா
டெய்வப் பெருமாள் வருகவே. (உ)

பரியாற் காடக் கடகரியாற்
பார்க்குந் தரள விளையாடும்
பருவச் சிறார்சிற் றடிப்பொடியும்
பசும்பொற் றெருடியார் பலகோடி

---

உ. பம்பு=ஆரவாரம். செழியவித்தி—செழிக்கும்படி விதைத்து. கண்டகம்=முள்வேலி. பரிசில்=ஆறிலொரு பங்கானவரி. உமணர்=உப்பு விளைப்போர். உப்பு அம்பாரம் வெள்ளி மலையாகவும், செந்நெற்குவியல் மேருமலையாகவுங் கொள்க. "வேதண்ட, மொப்ப வுயர்த்த வுயருப்புக் குவான்மீது, வெப்ப மறுமதிய மெய்யுரிஞ்ச—" என்று **சிவப்பிரகாச சுவாமிகள்** நெஞ்சுவிடுதூதில் இவ்வூர் வளத்தை எடுத்துக் கூறியதைக் காண்க.

பிரியாத் தெருவிற் சொரிசுண்ணம்
பிறங்குந் துகளு மகிற்புகையும்
பெருங்கா ரகிலா வியுங்கரும்பிற்
பிழிந்த பொழிசா றடுங்குய்யு
மரியாற் குயிலப் பயின்மாடத்
தாடுந் துவசக் குலத்துகிலு
மண்டத் தளவும் பிறபொர்துளி
யமரா வதிக்கொத் திரவுபக
றெரியாப் பெரிய வளங்கிளருஞ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாண் மயிற்பெருமா
டெய்வப் பெருமாள் வருகவே (௩)

ஆணிக் கனகத் தொருதிகிரி
யருக்கன் பெருந்தேர்ப் பசுங்குதிரை
யலங்குங் கூல மயிர்க்கற்றை
யடவித் தழையென் றுடல்வெருண்டு
வேணிப் புரமே பறந்தெழுந்து
விழுந்தே னிகண் டருகணைந்து
வெவ்வா னரங்க ளிறுல்பொதுத்துத்
தாழும் பருகி மிகுந்த தெலாம்

---

௩. காரகில் ஆவி=காரகிற்புகை. குய்=புகை.

௪. பசுங்குதிரை=பச்சைநிறக் குதிரை, ஏழ் என்னும் பெயருடைய ஓர் குதிரை யென்றும், எழுவகைப்பட்ட நிறத்தையுடைய குதிரை யென்றும் கூறுப. ஏழென்னுந் தொகையுள்ள குதிரைகள் என்பது மதுரையாசிரியர் பாரத்துவாசி முதலாயினோர் கொள்கையிற் கண்ட துணிபு. கூலம்=வால். வேணி=ஆகாயம். இறுல்=தேன்கூடு. பாணித்துணை=இருகை. பிணவு=பெண்மந்தி. குருளை=குட்டி.

பாணித் துணையிற் கதலிமடற்
படுத்துப் பிணவுக் குணவிடுத்துப்
பசிக்குங் குருளை கொளக்கொடுத்துப்
பசிய பலாக்காய் மிசையுறங்குஞ்

சேணிற் புயலிற் காங்கழுவுஞ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாண் மயிற்பெருமா
டெய்வப் பெருமாள் வருகவே. (௪)

நிறையோ டரிக்கண் மடமாதர்
நீலக் கமலத் தடங்குடைய
நெகிழ்ந்தே விழும்பூண் மாணிக்க
நீருட் கஞலக் கனியென்னத்

துறையோ டகலாக் கயல்கவரத்
திரியும் சிரலுங் குருகினமுந்
தொகும்போ தாவு மிருந்தாராத்
தொகையுந் திகைத்துக் கரைபுகலும்

பிறையோ முகிலிற் புகுவதெனப் பெடையும்
பார்ப்பும் புடையணைத்துப்
போரண் டமுங்கொண் டரவிந்தந்
துரந்து சுரும்பு பறந்தார்ப்பச்

சிறையோ டிமம்போய்ப் பொழில்புகுதுஞ்
செய்கைப் பெருமாள் வருகவே

---

ரு. நிறை=கற்பு. கஞல=பரந்துதோன்ற. சிரல்=சிச்சிலிப் புள். குருகு=நாரை. போதா=பெருநாரை. தாரா=ஓர்வகைப்பறவை. அரவிந்தம்=தாமரைப்பூ.

செவ்வேற் பெருமாண் மயிற்பெருமா
டெய்வப் பெருமாள் வருகவே. (௫)

பரம்பிற் குமுறுங் கடற்படுவிற்
பரவரிழைத்த கழைத்தூண்டிற்
படுமுட் கயிறு வயிறு புகப்
பதைத்து வெடிபோய்ப் பரியசுறு

நிரம்பிப் பெருகும் பெருங்கழிக்குள்
விழுந்தே நிமிர்ந்து வயற்கேறி
நீலக் கயத்து ளிழிந்துகயக்
கரையிற் பயிரா நீங்காத

கரும்பிற் கரிய நிழற்புனற்கே
கண்டே வெருண்டத் தூண்டிலெனக்
கலங்கித் திசைநான் கினுமோடிப்
பிறிதோ ரிடமுங் காணாது

திரும்பிப் பழைய வழிக்கேகுஞ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாண் மயிற்பெருமா
டெய்வப் பெருமாள் வருகவே. (௬)

கன்னற் குலமும் பலபொதும்பிற்
கறங்கு மிறாலும் பிறங்கியமுக்
கனியும் பொழிந்த கொழுஞ்சாறுங்
கழனி மடுப்பக் கழனிபடும்

---

௬. பரம்பு=விசாலம். பரவர்=மீன்பிடிப்போர். இவரைப் பட்டினவர் என்ப. கழைத்தூண்டில்=மூங்கிலாற் செய்யப்பட்ட மீன்பிடிகருவி. நீலக்கயம்=குவளையோடை. கரும்பின் கருநிழலை நீரிற்கண்டு தூண்டில் என்றெண்ணும் சுறாமீனென்க.

பன்னெற் கதிரும் பசுந்தாளும்
பசுந்தாண் மேய்ந்த பான்மேதிப்
பைம்புற் கொளுவுங் கடைவாயும்
பருவத் தரிந்த பிறையிரும்பு

முன்னற் கரிய பெரும்போரு
மப்போர் விளைத்த மள்ளாகையும்
முதிரும் வருக்கைச் சுளையழித்துக்
குவித்த களம்போன் முதன்மொழிந்த

செந்நெற களமு மளியலம்புஞ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாண் மயிறபெருமா
டெய்வப் பெருமாள் வருகவே. (எ)

## வேறு.

குரைகழ லடியை யடியவ ரிருகை
கொடுதொழு துருக வருகவே
குவலய முழுது மலமற வறிவு
குணநெறி பெருக வருகவே

யரைவட மணியு மணிபரி புரமு
மலைகள் பெருக வருகவே
யவுணர்த முயிரு முதிரமு மறலி
யலகைகள் பருக வருகவே

வரைமுக டிடிய மழையுடல் கிழிய
வரிமுது குரக தெளியமேன்

---

எ. பொதும்பு=சோலை. மடுப்பு=நிறைய. மேதி=எருமை. முன்னல்=நினைத்தல். போர்=நெற்போர். வருக்கை=பலா.

மகிதல மதிர வுடுகுல முதிர
வலம்வரு பரிதி யிரியவேழ்
திரைகட லகடு தெருமர முருக
சிறைமயி லிறைவ வருகவே
தெரிதமிழ் வளவ னகரியின் முருக
திருமகண் மருக வருகவே. (அ)

பதறிய கலப மறநெறி யுலவை
படவட குவடு மிடையவேழ்
படுகட னடுவு கிழிதர வுரக
படமுடி யிடிசெய் துலவுவா
யுதறிய வருண மணிகண கிரண
முலகிருள் கடிய முடியவே
றுழிதரு மயிலின் மரகத துரக
முகையறு முகவ வருகவே
கதறிய விரலை கடகரி வருடை
கவிமரை கரடி யிட,றிவீழ்
களபமொ டகிலு மடியற நெடிய
கழைபொழி தரள முருளநீர்

அ. மலம் = ஆணவம், கன்மம், மாயையென்னும் பாசங்கள். தெருமர = சுழல.

க. உலவை = பிரசண்டமாருதம். அயில் = வேலாயுதம். மரகதத்துரகம் = மரகத ரத்தினம் போன்ற (மயிலாகிய) குதிரை. உகை = செலுத்துகின்ற. இரலை = கலைமான். வருடை = ஆடு. கவி = குரங்கு. பழம் + நீ = பழன் + நீ = பழனீ = "பழனி" என்றாயது. இதனைப்பற்றிய கதையினை யுற்று நோக்குக. "பழம் நீ" என்பது பழநீ என்றாகி, அது பழநி என நின்றது என்பாருமுளர்.

சிதறிய வருவி யொழுகிய பழனி
திகழ்மலை முதலவ வருகவே
தெரிதமிழ் வளவ னகரியின் முருக
திருமகண் மருக வருகவே. (௯)

கரிபுரம வெளிறு மகபதி ககன
கனபதி புகுத வெகினனூர்
கருதுற வரிய வுபநிட வறிவு
கலையுறி குறிய நறியநீள்
பரிபுர மழலை யிருபத விமலை
பணைமுலை யமுத மொழுகவோர்
பகிரதி நயன பதுமமு மிதய
பதுமமு மலர வருகவே
யரிபுர நிகரு முகிலிடி வயிறு
மறைபட விடியு மலறவே
யலைகடல் பலவு மகிலமு முடிக
வடுபகை பொதுளி யிருளமா
திரிபுர மெரிய வொருவிசை முறுவல
செயுமவன் மதலை வருகவே
தெரிதமிழ் வளவ னகரியின் முருக
திருமகண் மருக வருகவே. (௧0)

வருகைப்பருவம் முற்றிற்று.

---

௧0. கரிபுரம் வெளிறு எனபகை வெளிறுபுரக் கரியென இயைத்து வெள்ளையடலையுடைய ஐராவதயானை எனப்பொருள் விரிக்க.

ஏழாவது

## அம்புலிப் பருவம்.



வீதிப் படுஞ்சக்ர வாளமு மிவன்றேருகை
வெம்பரிச் செண்டுவெளிகாண்
விடநாக பாதாள மிவனப் பரிக்கிடும்
வெங்கவள சாலையேகாண்

மோதிப் பொரும்பெருங் கடலேழு மிவன்வேல்
முனைக்கே யடக்குபுனல்காண்
முடியா பிரத்தவட மேருவு மிவன்கரையின்
முன்கட்ட நட்டதறிகாண்

சோதித் திசாமுகக் கிரியடங் கலுமிவன்
றொடுகையிற் பம்பரங்காண்
சுரராஜ ருஞ்சுரரு மிவனேவ லைத்தலைச்
சூடும் படைச்சேனைகா

ஞாதித் தலோகமிவ ஞற்ரு யதாணிகா
ணம்புலீ யாடவாவே
யயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுட
னம்புலீ யாடவாவே (க)

**அம்புலிப்பருவம்** :—அஃதாவது பாட்டுடைக் குழவியோடு விளையாடவருக வென்று தாயார் சந்திரனை சாம பேத தான தண்டங் கூறி யழைக்கும் பருவமாம். இது பதினெட்டாம் மாதத்துக் கூறப் படுவது.

க. செண்டுவெளி=குதிரை வையாளிவீதி, குதிரை செலுத்து மிடம். கவளசாலை=குதிரைப்பந்தி, உணவூட்டுமிடம். தறி=தூண். மதாணி=பதக்கம்.

இரணிய கருப்பன்வீ டென்றென்று முன்னையே
யிசைழ்ந்தமைக் குங்கொடுமைபார்த்
திக்குற்ற மெண்ணவிப் பிறர்குற்ற மேபோல
வேறுமவனைச் சிறிஞன்

தரணியை யொழித்துனக் குறவா யிருக்கின்ற
தன்மையிற் கருணைபொங்கித்
தணிகையங் குவளையிற் போதுமுப் போதினுந்
தன்புயத்தே புனைந்தான்

முரணிய வரக்கர்க் கிடந்தந்த தானுலு
முதலுன் பிறப்பதனிஞன்
மோதுசீ ரலைவாயின் மீதிருந் தருளிஞன்
மூவர்க்கு மொருதலைவனே

யரணிய வெறுப்பாக நீவெறுப் பாவையே
யம்புலீ யாடவாவே
யயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (உ)

பூதலப் பகிரண்ட மாதலத் துள்ளார்
புறத்துளா ரத்தேவரும்
புகுமினென் றிவன்விளித் தருளிஞ லமையும்
புகாதிருப் பாருமுளரோ

உ. இரணியகருப்பன வீடு=பிரமனது இருப்பிடமாகிய தாமரைமலர். தரணி=சூரியன். குவளையிற்போது=இந்திரனால் வைக்கப்பட்ட நீலோற்பலம். அரணியம் = (சடையாகிய) காடு. வெறுப்பு=செல்வம்.

வோதலிற் கதிரவன் வக்கிரன் னின்சுத
னொருகுருப் புகர்மந்தனு
மோராறு கோளிளையு நின்போ லழைத்தழைத்
துவகையிற் பெருகினனே
காதலிற் சடையிடைக் கங்கையில் வளர்ந்தே
தவழ்ந்தெழுங் குழவிநீயுங்
கங்கையில் வளர்ந்தே தவழ்ந்தெழுங் குழவியிக்
கருணை லயக்குரிசிலு
மாதலிற் றுணைதனக் காமெனக் கருதினு
னம்புலீ யாடவாவே
யயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (௩)

மதனனை மைத்துனன் கவிகையா யுந்தனது
மாமற் கிருக்கையாயு
மாருத தன்பிதா மகுடச் சூடர்ச்சிகா
மணியாயு நயனமாயு
மிதநாக நகரா ரெனுந்தம் பதாதியர்க்
கிடுமன்ன சாலையாயு
மிந்த்ராணி யென்கின்ற தன்மாமி பெயருமுன்
பெயராயு மிதுவன்றியு

௩. இது சாமம். வக்கிரன்=செவ்வாய். நின்சுதன்= புதன் புகர்=சுக்கிரன், மந்தன்=சனி.

௪. இதுவும் சாமம். கவிகை=குடை. தேவர்கள் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கலையை அமுதாகப் பருகுவாரென்பது நூற் கொள்கையாகலின் அன்னசாலையென்றார். மாமிபெயர்=சசி.

முதனெறி வள்ளியைப் பெற்றதாய் வடிவமுன்
வடிவின் முயக்கமாயு
முழுதுமிப் படிபடைத் திருவருக் குந்தொன்று
தொட்டுமுன் பெருமைபிரியா
வதனு லழைத்தன னலதனை யழைப்பனே
வம்புலீ யாடவாவே
யயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (௪)

ஊழியிற் கடவுளா மிவனடைக் குஞ்சிறை
யுறைந்தவன் மெய்க்கூறுநீ
யுலகத் திவன்கொடிக் கூவலுக் கேவெறுப்
போடொளித் தோடுமவனீ
சூழியிற் சரியுரித் தேவர்தந் தேவிசெந்
துகிலிடைக் கிடைபுகாமுன்
றொட்டிலிவ னுச்சிடுந் தாமரைப் போதொடுந்
தொன்மாறு பட்டவனுநீ
பாழியத் திரிமக னீயவன் றம்பிகா
சிபன்மகன் பாரசூரன்
பகையெனக் கருதினுங் கருதுவ னினநீ
பலகா லுதித்துவளரு
மாழியைப் பொருகினும் பொருவனிங் கிவனுட
னம்புலீ யாடவாவே
யயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (௫)

---

௪ தாய் வடிவம்=(மான்).

௫. இது பேதம். கொடி=(சேவல்). சூழி=முகபாடாம். அத்திரிமகன்=அத்திரிமுனிவரது புத்திரன் (சந்திரன்). அரவு=(இராகு).

தேயவும் பெருகவுந் தேவருன் கலைகளைத்
தினமுமோ ரொருவராகச்
சிதறிப் பறித்துண்ப தறிவையே யவரெலாஞ்
செவ்வேள் பெருஞ்சேனைகாண்
டேயவிங் கிவனிடத் தெய்திறு லமையுமச்
சுரருங் கவர்ந்திடார்காண்
டோகைவா கனமொன் றிருத்தலா *லரவுனைத்
தொடவும் பயப்படுங்காண்
மாயவன் மருகனுக் கன்பெனக் கிரிமத்தின்
வைத்துனைப் புனைகிலன்காண்
மதலைக்கு நேயமென மதலையந தாமனடி
மலர்கொண் டரைககிலன்கா
ணுயநின் பகைபுகா வரணிவன் சரணிவ
ணம்புலீ யாடவாவே
யயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (சு)

நெஞ்சா லுகந்துகந் தினிதழைத் தாலவராய்
நீயவன் றிருவு ளத்தே
நிமிரும் பெருங்கோபம வந்தா லிவன்றோகை
நீலக் கலாபத்தினன்
மஞ்சார் பொருப்பெலா மாருதப் பூளையாய்
வானமுந் தாளின் மறையும்

---

சு. இது தானம். மதலை=கொன்றை. ஈண்டு குறிக்கப்பட்டது வீரபத்திர மூர்த்தம்.

* அரவுவாய் எனவும் பாடம்.

எ. இது தண்டம். பூளை=இலவம் பஞ்சு.

வடமேரு வுருசேவ லின்கூவ லால்விழும்
வனசத் திருக்கைவேலால்
விஞ்சாழி யேழுங் கனலெகொண்டு புகைமண்டி
வேயிடத் தோடினாலும்
வீரவா குத்தலைவர் முதலாம் பதாதியர்
விடுத்திடா ராகவினுனைக்
கஞ்சா தொளிததிடப் பிறிதிடங் கண்டிலே
னம்புலீ யாடவாவே
யயில்வனச் செயகையின் மயிலவனக கந்தனுட
னம்புலீ யாடவாவே. (எ)

கூடன்மே லைப்பரங் குன்றகத தொருமுழைக்
கொணடுபோய்ப் பண்டுசயகக்
குலமுதற் கலைவாண னைக்கரந் திடுபூத
மிடுகையிற் கூறுமாற்றுப்
பாடலா முருகுகேட் டம்முழை திறந்துவிட்
டருளிய பரமபொரு ளிவன்
படவரா வென்னுமப் பூதம் வளைத்துவெம்
பகுவாய் முழைக்குளிடுநாள்
நாடெலா முன்னையுங் கலைவாண னென்கின்ற
நாமத்தின் வரிசையதனு
னளினத் திருககைவே லாயுதம் விடுத்தேனு
ஞாலமே ழுஞ்சூழவந்
தாடலா டும்பரி விடுத்தேனும் விடுவிப்ப
னம்புலீ யாடவாவே

அ. கலைவாணனை=நக்கீரன் (கலை=கல்வி) ; கலைவாணன்=சந்திரன் (கலை=அமிர்தகலை). பரி=வாகனமாகிய மயில.

பயில்வனச் செய்கையின் மயில்வனகக்ந்தனுட
னமபுலீயாடவாவே. (அ)

மையோத வாரித் திரையிற பிறநதனன
வளவன கழுகக்குனறனு
மாருது நீயுமத திரையிற பிறந்தனை
வளவன் கழுககுன்றனைச
செய்யோ னெனபபுண ணியமபுரிந் தகளஙக
ளுதலிற் செவவேலவன்
செஞசிலம பிற்சிற டிததாம ரைபபோது
சேவிகக வாழவித்தனன்
றய்யோ னலாமற்க ளஙகளு கிகுருத்
தோகைபொற கொஙகைபுணருந்
தொலபெருந் தீவினை யினைந்துனைச சேராது
தூரவிட டானெனவுனக்
கையோ விகழசசிவரு மககுறை பொலாநதிர
வமபுலீ யாடவாவே
யபில்வனச் செயகையின் மயிலவனக கந்தனுட
னமபுலீ யாடவாவே. (௯)

தவிராத வெவ்வினை தவிர்ககு முருகாறுந்
தரித்தா றெழுத்தோதலாளு
சங்கிதிக் கருணகிரி நாதன் றிருப்புகழ்ச்
சந்தம புகழந்துய்யலாம

---

௯. குருத்தோகை=வியாழ பகவான மனைவி.
௧௦. ஆறெழுத்து = (நமஃ குமாராய)

புவிராஜன் வளவன் கழுக்குன்றன் வளமைபுரி
புண்ணியந் தரிசிக்கலாம்
பொருஞ்சூ ரனைப்பொருங் கதைமுதற் கந்தப்
புராணக் கடற்காணலாம்
கவிராச னிப்பிரான் மிசைசெய்த திருவுலாக்
கவிவெள்ளை கற்றுருகலாம்
கவிவீர ராகவன் சொற்றபிள் ளைக்கவி
கலம்பகக் கவிவினவலா
மவிராடகக் கோவில் புக்குவிளை யாடலா
மம்புலீ யாடவாவே
மயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுட
னம்புலீ யாடவாவே. (௧0)

அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

௧0. கவிராஜன் = கருணீக கவிராசப்பிள்ளை. கவிவெள்ளை = (உலா); இது வெண்பாயாப்பினலாயது. கலிவெள்ளை (கலிவெண்பா) என்பதூஉம் பாடம். ஆடகம்=பொன்.

எட்டாவது

## சிறுபறைப் பருவம்.



(க)

பூரா யுவரிற் பெரிய பரப்பிற்
புதிய மதிக்கதிரே
பொங்குஞ் செங்கதி ரிற்சொரி கின்றது
போலப் பொய்கையின்வாய்

மீனு முதவும் புத்தமு தத்தின்
வெள்ளரு வித்திரளே
மீதிற் பொழியப் பொழியப் பருகி
விழிதுயி லும் புதல்வா

வானு றளவுங் கிளருங் கமுகினும்
வளரும் வருக்கையினும்
வாழை வனத்துந் தாழை வனத்து
மாவினும் விட்டவிருற்

றேனு ெழுகுஞ் செய்கைப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே
செந்திற் பெருமாள் கந்தப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே. (க)

---

**சிறுபறைப்பருவம்:**—அஃதாவது பாட்டுடைக் குழவியைச் சிறுபறை கொட்டும்படி வேண்டும் பருவம். இது இரண்டா மாண்டிற் கூறப்படுவது.

க. உவரிற் பெரிய பரப்பு=சமுத்திரம். வருக்கை=பலா.

பையிற் சுடிகைக் கொடுநா கேசன்
பாதா ளத்தளவும்
படுமா ழித்தே ரிற்பெரு மதகிற்
பகுத்த புனற்பாயுந்
தொய்யிற் பழனப் பவளச் சாலித்
தொகுதிக் கதிர்வானச்
சோதிக் கதிரின் மோதித் தழையுந்
தொண்டைத் திருநாடா
மையிற் சொரியக் கிரியிற் பாலி
வழிந்தா ழியின்மட்டும்
வானேக ளெதிரப் பானேக ளுந்திரு
மடற்கமு காடவியும்
செய்யிற் புகுதுஞ் செய்கைப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே
செந்திற் பெருமாள் கந்தப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே. (உ)

கனையிற் கயமுங் கயமேல் வளருங்
கமல மலர்க்காடுங்
கழுநீர் மடுவு மப்பெரு மடுவின்
காலும் பலகாலு
நனையிற் குமுதப் புனலும் புனலே
நாலு மிகக்கிடையு
நாகிள மேதி முலைப்பால் வழியு
நறுங்குழி யுங்கழியு

உ. பை=படம். தொய்யில்=உழுநிலம்.
ங. மேதி=எருமை.

முனையுப் பளமு மளத்தரு கெங்கணு
மொய்த்தெழு கானிழலும்
முன்னும் பின்னு மினத்தொரு கோடிகள்
முரல வலம்புரிபோய்
சினைமுத் துமிழுஞ் செய்கைப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே
செந்திற் பெருமாள் கந்தப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே. (௯)

## வேறு.

காழிய நகரிற் கவுணிய மரபிற்
காதல னுகிமலைக்
கன்னி முலைத்தலை யுண்ட முதுதமிழ்க
களையு மரும்பொருளே
தாழியில் வளருங் குவளைப் போதொரு
மூப்போ துந்தானுந்
தணிகைக் கிரிபுக் கணியுங் களிறே
சதுர்ம றையின்பேறே
யாழியு முலகு மெடுக்குஞ் சுடிகை
யரவைப் பொருதுகிழித்
தாடுந் தோகையு மாயிர கிரணத்
தருணன் வரக்கூவுங்
கோழியு மெழுதுங் கொடியுடை வேளே
கொட்டுக சிறுபறையே
குகனே செய்கையின் மூவிரு முகனே
கொட்டுக சிறுபறையே. (௰)

௧. கவுணியமரபிற் காதலன் = சம்பந்தன்.

சென்று காரவின் செருகுதி துரப்பச்
செழுநீர் நாய்தொடரச்
சிதறிச் சிதறிப் பதறிப் பதறிச்
செறுவிற் கரையேறும

துன்று வராலுக் குடலம் வெருண்டு
துவண்டோ திமசாலம்
சோலைக் கிடைபுக் கடையும் பழனத்
தொண்டைத் திருநாடா

கன்று விடாமற் பிடியுங் களிறுந்
திரியுங் கனசாரற்
காய்வரி ரத்தொகு தித்திரள் பெருகக்
கதிரின் பரிபருகுங்

குன்றுதொ றாடுங் குமர பிரானே
கொட்டுக சிறுபறையே
குகனே செய்கையின் மூவிரு முகனே
கொட்டுக சிறுபறையே. (௫)

பங்கக் கமலத் தவனைக் கமலப்
பதத்தனை களைகவெனப்
பரிதித் திகிரிக் குலிசப் பாணிப்
பண்ணவ ரிருவருமத்

துங்கத் தவருஞ் சுரரும் பிறருஞ்
சொல்லும் வணக்கமொடுந்
தொழுத கரத்தொடும் வந்து நெருங்குந்
தொல்கோ புரமுடையாய்

சிங்கக் குருளைத் திரளே களபத்
திரளைக் குருகுகொளத்
தேடித் தேடித் திரியும் பிடியுந்
திண்களி றுங்களிறுங்

கொங்கப் பழனிக் கொளிமலை முதலே
கொட்டுக சிறுபறையே
குகனே செய்கையின் மூவிரு முகனே
கொட்டுக சிறுபறையே. (கூ)

வேறு.

முதலைகவ ரக்களிறு முதலெனநினைக்குமவன்
முதுமுகள் விருப்பவழகா
முனிமொழி வழிக்குருகு பெயர்கொடு கிடக்குமொரு
முகடுதொடு வேற்பழகிலா

மதலைமெள விக்கரிய கருவிட மிடத்துணியு
மறிகடல் விடுத்தழுவுவார்
வயரதவி தத்துரக சலதியவு ணத்தொகுதி
மரபொடு துடித்தழவரோ

குதலையமு தச்சுவைக ளறுவர்மக ரச்செவிகள்
குடிகொள வழைத்த முதுநீர் (எ)
குரைசரவ ணத்தருகு கவுரிதமு வித்தனது
கொடியிடையில் வைப்பவனையாள்

---

எ. முதலை:—ஊகூ என்னும் கந்தருவன் சாபத்தினால் முதலை வடிவம் பெற்றிருந்தான். களிறு:—இந்திரத்துய்மன் என்னும் அரசன் சாபத்தினால் யானையுருவம் பெற்றிருந்தான்; இவ்விருத்தாந்தத்தைக் கஜேந்திர மோக்ஷக் கதையாலுணர்க.

திதலைமுலை தத்தருவி பருகியமு மெய்க்குழவி
சிறுபறை முழக்கியருளே
திருவளவர் பொற்பதியில் வருகுளவ சத்திர
சிறுபறை முழக்கியருளே. (எ)

நறியபல விற்பெரிய முடவடி வெடுத்தகனி
நவையற நிறைத்த சுளையோ
நகைமதி முதற்பரிதி தகைபடு மடற்கதலி
நனிபல பலித்த பழமோ
முறியவை சிவப்பொழுகு மழகியன கொக்குவன
முதுகிளை கிளைத்த பழமோ
முகடுதொடு மக்கடலி னெரியநெரி சைக்குளழி
முகிலென வொழுக்கு புனலோ
வுறியமுது துய்க்குமவ னிருகையிலு மத்துழல
வுததியி னுதித்த சுதையோ
வுபநிடம றைப்பசுவின் முலைமடி சுரப்படைய
வுலகிடை துளித்த துளியோ
சிறியமழ லைச்சுவையி தெனமல ரிதழ்ச்சிறுவ
சிறுபறை முழக்கியருளே
திருவளவர் பொற்பதியில் வருகுளவ சத்திர
சிறுபறை முழக்கி யருளே. (அ)

புகைவிடு சுடர்க்கனலி தலைவிமடி புக்கமுது
பொழிமுலை யலைத்த கைகொடே
பொருதிரை குரைத்தொழுகு பகிரதி யுரப்பவெழு
புதுமதி யழைத்த கைகொடே

அ. கொக்கு=மாமரம். முகில்=மேகம்.

முகைவிழு மடற்பொதுளு முளரியிடு தொட்டிலினின்
முரலளி விலக்கு கைகொடே
முதலறு வரைப்பருகி விமலையுட லைத்தழுவி
முடிமல ரெடுத்த கைகொடே
நகைவிடு முடிச்சுரரை வெருவன்மி னெனக்கருணை
நயனமொ டமைத்த கைகொடே
நளினனும் விளக்கரிய பொருளையறை யக்குறியின்
நடுகுழை யிழைத்த கைகொடே
சிகைவிடு கதிர்க்கடவுள் வரவறி கொடிக்கடவுள்
சிறுபறை முழக்கி யருளே
திருவளவர் பொற்பதியில் வருகுளவ சத்திதர
சிறுபறை முழக்கி யருளே. (க)

உரைவிரி திருப்புகழை விழுமியவர் முப்பொழுது
மொலிகெழ முழக்க வழுவா
வுபநிட முதற்சுருதி கருதியமு னிக்குழுவு
மொழிவற முழக்க முழுதே
தரைவிரி வினைத்துரிசு தனையற வறுக்குமுகில்
தருமமு முழக்க வெதிரே
தமதுசிறை யைத்தடியு மதிரவிர லைப்பணிகவர்
தகுதியின் முழக்க வருகே
நிரைவிரி தமக்குறவி னறுவர்தவ சித்தியென
நிழலொடு முழக்க நெடிதே
நிருதருதி ரப்புணரி பருகலை நினைத்தலைகை
நிறைகுல முழக்க முறையே

---

க. அறுவர்=கார்த்திகைத்தாயர். நளினன்=பிரமன். கதிர்க்கடவுள் வரவு அறிகொடி=சேவல்.

திரைவிரி கடற்குரிய மருகமுரு கக்கடவுள்
சிறுபறை முழக்கி யருளே
திருவளவர் பொற்பதியில் வருகுளவ சத்திதர
சிறுபறை முழக்கி யருளே. (கo)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.



ஒன்பதாவது

## சிற்றிற் பருவம்.

---

கோவே கொவ்வைச் செழும்பவளக்
கொழுந்தே குறவர் பசுங்கிளியுங்
குலிச னளித்த விளங்குயிலுங்
குனிக்கு மயிலுந் தனித்தகலாக்

காவே வேதப் பெருங்கடலே
கடலிற் கடையாக் கவுத்துவமே
கங்கைப் புனலால் வளர்ந்தெழுந்த
கரும்பின் சுவையே சுரும்பிமிராப்

பூவே பூவில் வருந்தேனே
பொருங்கோ ளரியே யரியபரம்
பொருளே யுலகுக் கொருபொருளா
மவற்கும் விளங்காப் பொருள்விளக்கும்

தேவே தேவக் குலமுதலே
சிறியேன் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேன் சிற்றில் சிதையேலே. (க)

---

**சிற்றிற்பருவம்:**—அஃதாவது சிற்றில் இழைக்கும் சிறுமியர் தஞ்சிற்றிலைச் சிதைக்கவேண்டாமென்று பாட்டுடைக் குழவியை வேண்டும் பருவம். இது மூன்று மாண்டிற் கூறப்படுவது.

கானே கமழும் கடம்பவிழ்தார்க்
கடவுட் கரசே சுரலோகம்
காக்குந் துணையே யவுணர்குலங்
களையுங் களிறே யிளையசிறு
மானே யுலகுக் கொருதிருத்தாய்
மகவே மகரா லயங்காயும்
வடவா முகமே யறுமுகமா
மதிய முதித்த வானகமே
தானே யுவமை தனக்கலது
பிறிதொன் றில்லாத் தனிப்பொருளே
தருமப் பொருளே யெழுத்தாறுந்
தரித்தா ரிதயத் தாமரைச்செந்
தேனே தெவிட்டாத் தெள்ளமுதே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (உ)

மருவிற் பசுமைத் துளவோனும்
வனசத் தவனுங் காணாத
வடிவிற் சோதி மடிப்புறத்தே
மலருந் திருத்தா மரையலவோ
வுருவிற் புவனஞ் சதகோடி
யுதரத் துமிழ்ந்த பெருமாட்டி
யுரமுந் தனமுங் கரமுமறந்
துறையாச் சிறுபங் கயமலவோ

---

உ. மகராலயம்=கடல்

கருவிற் பெரியார் சிரமனைத்துந்
தரிக்குங் கமலக் குலமலவோ
சதுமா மறையின் றலைப்பூத்த
தண்டைப் புதுமுண் டகமலவோ
தெருவிற் பொடியும் புகத்தகுமோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௩)

உதயா தவற்கு மிமகரற்கு
மொழியாப் பதமு மழைவண்ணத்
தொருவன் புரந்த மாளிகையு
மும்பர்க் கரசன் பீடிகையுஞ்
சுதையா தரிக்குஞ் சுரர்வீடு
முடுவி னிருப்பும் பெருமுனிவர்
சுருதி கிளேக்குந் திருமனையுஞ்
சோரா வுரகப் பேரகமும்
மதயா னையினெண் டிசைப்பாலர்
மணியா லயமும் விஞ்சையர்கள்
வயங்குங் கோயில் பலப்பலவும்
மக்கட் குடியும் புக்கவுணர்
சிதையா துதித்த பிரானன்றே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௪)

---

௪. உதயாதவன் = உதய சூரியன். சுதை = அமிர்தம்.
உடு = நக்ஷத்திரம்.

உருமே கடுக்குந் திருவரைநா
ணுடுக்கு மணிக்கிங் கிணிநாவிட்
டொருசற் றொலித்தாற் பகிரண்ட
கூடந் திடுக்கிட் டுடையாதோ
மருவே திகழுஞ் செங்கமல
மலர்ச்சீ றடியிற் சிறுசதங்கை
வாய்விட் டாற்றிற் கடலேழும்
வாய்விட் டாற்றி மறுகாதோ
குருமே தகைய கடகமுங்கைத்
தொடியுங் கறங்கிற் புவனமெலாங்
கோலி வளைக்கும் பலகோடிக்
குவடும் பிதிர்பட் டுதிராதோ
திருமே னிகுழைந் திடநடந்து
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௫)

சுற்றின் முழங்குங் கடலேழு
முலையாய்ச் சுடுதீ வடவனலாய்த்
தொல்லைத் திகிரிக் கிரியடுப்பாய்ச்
சுடர்மா மேரு கடமேயாய்
முற்றில் பிடித்துக் கொழித்தெடுக்கும்
வல்சி முகட்டி லுடுக்குலமாய்
முதிருங் கதிரோ திருவிளக்காய்
முகிலூர் தியினுன் மூதூரும்

சு. வல்சி=அரிசி. உடு=நக்ஷத்திரம். முகிலூர்தியினன் மூதூர்=அமராவதி.

பற்றில் வகுத்த பேரளகைப்
பதியும் பசும்பொன் னறையேயாய்ப்
பணிப்பா தலஞ்செம் மணிப்பேழைப்
படியா யடையும் பகிரண்டஞ்
சிற்றி லிழைப்பா டன்மகனே
சிறியேஞ் சிற்றில சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில சிதையேலே. (சு)

நகைத்தண் டாளத் திரளரிசி
நறுந்தே னுலையுங் கவிழாதோ
நந்தின் கடமு முடையாதோ
நளிமா துளைத்தீ யவியாதோ
தொகைத்தண் பவள விளக்கணைந்து
விடாதோ வடியேம் வதுவையெனச
சொல்லிச் சொலலிக் கொணர்ந்தசிறு
விருந்தும் வருந்திச சோராதோ
முகைபபுண் டரிக முரம்பிணித்து
முலையென் றிழிந்து கிட்டத்திரங்கி
மொழிந்து துயிறறு மணற்குழந்தை
முழுத்தா மரைக்கண் விழித்துமனந்
திகைப்புண் டழுது தேம்பாதோ
சிறியேஞ் சிற்றில சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில சிதையேலே. (எ)

---

சு. பேழை=பெட்டி.
எ. உரம்=மார்பு.

வெய்யோன் பகலை யிரவாக்கும்
விரகிற் பெரிய நின்மாமன்
மேனாட் பொதுவ ரகம்புகுந்து
* வெண்பா லுறியி னடுக்குழிப்பக்

கையோ ரிரண்டும் பிணித்திலரோ
குடவர் மடவார் சகங்காக்குங்
கடவு ளெனத்தான் பயந்தனரோ
கட்டா தகல விட்டனரோ

வையோ புலந்து தமியேமு
மன்னை மார்க்குஞ் செவிலியர்க்கு
மழுது மொழிந்தாற் சீறுரோ
வனைத்து மொருவ னாகிநிற்குஞ்

செய்யோன் மகனென் றஞ்சுவரோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௮)

உவந்து தமியேன் முகக்கமலத
தொளிவா டுகைக்கு நின்றிருத்தா
ளோரா யிரக்கார் பணிந்துபணிந்
தொழியா திரக்கு மொழியினுக்குங்

கவந்த நடிக்கு மவுணர்செருக்
களத்தே செருக்கு முனைதுதகர்

---

* 'வெண்பா லுறியி னடுக்கொழிப்ப' என்பதும் பாடம்.
௮. பகலையிரவாக்கினமை பாரதயுத்தத்தில்.
௯. கவந்தம்=உடற்குறை, முண்டம். தகர்=ஆட்டுக்கடா.

கடவு ளினத்தின் கொடுமெருப்பாற்
கலங்கு நிலைக்குங் கழுநீராய்

நிவந்த கருங்கண் சொரிந்தெமது
நிறமுங் கறுத்த கண்ணீர்க்கு
நிலாநித் திலமும் வயிரமுமே
கொழித்துக் கொழித்து நிலத்திழைத்துச்

சிவந்த விரற்கு மிரங்காயோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (கூ)

எழுத்தாய் நிகரு மிருகரங்கள்
வருந்தி வருந்தி யமன்முதலோர்
இயற்றும் பெருஞ்சூர் மாளிகையோ
விருங்கோ ளரிமா முகனகமோ

முழுத்தா ரகன்றன் சிரகமோ
முதிருங் கதிரா யிரத்தினையும்
முனிந்தோன் முரசும் பேரிகையு
முழங்கி யெழும்பொற் கோயில்லோ

மழுத்தா மரைக்கை மணிமிடற்றன்
மகரச் செவியுட் பசருமொரு
வழுவாப் பொருளை யறியாது
மயங்கித் தியங்கிச் சிறையுறைந்தான்

---

௧௦. சூர்=சூரபன்மன். அரிமாமுகன்=சிங்கமுகன்.

செழுத்தா மரைப்பூஞ் சிற்றில்லோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (கo)

சிற்றிற் பருவம் முற்றிற்று.



கo. செழுந்தாமரை யென்பது எதுகைநோக்கிச் 'செழுத்தாமரை' என்றாயது.

## பத்தாவது

# சிறுதேர்ப் பருவம்.



வாடை யடிப்பொடு தென்கரை யந்த
வசந்த னடிப்பொடுபின்
வடகரை கொண்டன் மடங்கு மடிப்பொடு
மேல்கரை மண்டியங்கக்

கோடை யடிப்பொடு கிழ்கரை மோதி
யலைந்த சலஞ்சலமும்
கோல வலம்புரி யும்பல கோடி
குழாமோ டிக்குடிபோய்ப்

பேடை யனத்திரள் சேவ லனத்தனி
பின்பு தொடர்ந்துசெலப்
போரக ழிக்குழி யாழ விழுந்து
பெருங்கா லுக்குழலு

மோடை யிடத்தை விடுந்த செயூரா
வுருட்டுக சிறுதேரே
வுலகை வலம்புரி கலப மயூரா
வுருட்டுக சிறுதேரே. (௧)

---

**சிறுதேர்ப்பருவம் :**—அஃதாவது பாட்டுடைக் குழவியைத் தாயர்சிறுதேருருட்டும்படி வேண்டும் பருவம். இது நான்காமாண்டிற் கூறப்படுவது.

௧. வாடை=வடகாற்று. வசந்தன்=தென்காற்று. கொண்டல்=கீழ்காற்று. கோடை=மேல்காற்று. சலஞ்சலம்=வலம்புரி ஆயிரஞ் சூழ்ந்த சங்கு. பெருங்கால்=சூறைக்காற்று.

துப்பள வுங்கட லைச்சுடு தொன்மை
யறிந்தழு தக்கடலுஞ்
சூழ விழுந்து தொழுந்தொழில் போல
வெழுந்தம திச்சுடரே
வெப்பள வுங்கை மழுப்படை யாள
ரழைத்தன ரன்னவர்சேய்
மெய்ப்பதி சேரின் வராதன வந்தது
போலவி திப்பெயரோன்
றப்பள வில்லை விடுத்தி யெனத்தன
தன்னமி னத்தொடுபோய்த்
தால மறைப்ப விரித்த சிறைக்கொடு
தாழ்வது போலவருத்
துப்பள மெங்கு நிரப்பு செயூரா
வுருட்டுக சிறுதேரே
வுலகை வலம்புரி கலப மயூரா
வுருட்டுக சிறுதேரே. (உ)

பச்சிம திக்குண திக்கு வடக்கொடு
தெற்குவி ளங்காமே
பரிதியு மிந்துவும் வழிவில கிப்பல
காலுமி யங்குதிருக்
கச்சிந கர்க்கரு கிற்பெரு கிக்கவு
ரிக்கண மாதர்வருங்

---

உ. துப்பு=பவளம். கடலைச் சுடுகை=மதுரையில் உக்கிர பாண்டியனுய்க் கடல் சுவற வேலெறிந்தமை. தாலம்=பூமி.
௩. பச்சிமம்=மேற்கு. இந்து=சந்திரன்.

கம்பை நதிக்கரை மாவடி வைகிய
கங்கைந திப்புதல்வா
நச்சிய ளிக்குல மொய்த்த மலர்க்கம
லத்துந டுப்படுவீ
நாகிள வாளை களித்து களித்து
நறும்பா ளைக்கமுகத்
துச்சிகு தித்திழி கின்ற செயூரா
வுருட்டுக சிறுதேரே
வுலகை வலம்புரி கலப மயூரா
வுருட்டுக சிறுதேரே. (௩)

வேறு.

மாவைத் தனிக்கவிகை யொளைவைத்த கம்பற்கு
மருணவரு ணுசலற்கும
வக்கிரே சற்குமக் காளத்தி யீசற்கு
மயிலையங் சத்தையொருபூம்
பாவைத் திறந்தந்த நாதற்கு மொற்றியூர்ப
பகவற்கு மாதிநடன
பதிவடா டவியற்கும் *வேதபுரி யற்குமே
பரம்பரம சூரவற்கும் மடபா
கோவைப் பெருஞ்சுருதி நந்திருத் திரர்கோடி
கோதில்சம் பாதியபயன்

௩. வீ=புஷ்பம். களித்து களித்து :—சந்தவின்பம் நோக்கி வலிமிகாது போயிற்று.

* வேதகிரி எனவும் பாடம்.

குலிசன்மால் கமலனூர் முதல்வர்நா லிருவர்மெய்
கொண்டமார்க் கண்டன்முதலோர்

சேவைக் கழுக்குன்ற வாணற்கு மொருமைந்த
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய் சரவணப் பொய்கையாய் தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. (ச)

நீறெழக் கனகக் கிரவுஞ்சங் கடந்தோடி
நிலம்வெதும் பக்கடலெலா
நிமிடமுற் சுடுவித்து மக்கடற் குழியேழு
நிருதர்குரு திக்கடலினுல்

மாறெழப் பழையமடு விற்பெரு மடுக்கண்டு
மாசூரை வேரறுத்தும்
வடமே ருவைசசூழ வந்துமெதிர காருறு
வாயிரக் கமையாதுபோய்க்

கூறெழக் கனசக்ர வாளம் பிளந்துமக்
கோபமா றுதுமீதிற
கொண்டலை யெரித்தண்ட கூடந்திரித்தண்ட
கூடப் புறப்புனலையும்

சேறெழப் பருகித் திரும்புங்கை வடிவேல
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய் சரவணப் பொய்கையாய தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. (ரு)

---

ச. கவிகை=குடை. குலிசன்=இந்திரன.
ரு. கிரவுஞ்சம்=ஒருமலை. நிருதர்=இராக்கதர்.

**வைவத்** துரந்தாடு முரகக்கு லேசன்மகள்
மகளுகு மொருதொண்டைமான்
வாரிதித் திரைநல்கு மன்னன் பெரும்பேர்
வரம்பெற்ற வொற்றிகொண்டான்

சைவத் தவப்பயனை யொத்தவன் வழிவந்த
தனையன் கழுக்குன்றனுந்
தக்க செம்பியவளவன் விந்தனைக் காலயம்
சகலமும் தந்ததற்பின்

பௌவத் தலத்தெழு *சகாப்த மோராயிரத்
தொருநாலு நூற்றின்மேலும்
பயிலுநாற் பத்துமூ வருடமாம் †விடுவருட
மகரம் பகுத்ததிருநாட்

---

சு. *சாலிவாகன சகம் 1443=(1443+78=1521. கி. பி.) ல் அதாவது இற்றைக்கு முந்நூற்றெண்பது வருடங்கட்கு முன்னர் முதற்றிருவிழா நடந்தேறியது.

† சில பிரதிகளில் **விட** வருடமென்றும் **விய** வருடமென்றும் வேறுபாடங்களுமுள. ஆயினும் **விடு**வருட மென்பதே சரியான பாடம். 1443-வது சகம் ஆங்கில வாண்டு 1521-ஆம் ௵த்துக்கு சரியாயுள்ளது. இவ்வருஷத்திற்குச் சரியாய் வருவது பிருஹஸ்பதி வட்டம் **விஷு** (விடு) வருஷம் என்பது. **விய** என்பதோ சகம் 1449-க்கும், ஆங்கில வாண்டு 1526-க்கும் சரியாயுள்ளது.

**விட** என்பது அறுபது வருஷத்தில் ஒன்றாகக் காணப்படவில்லை. ஆயினும் விஷு (விடு) வருஷத்திற்கே வ்ருஷப ([illegible]), ப்ருசிய ([illegible]) என்னும் வேறு பெயர்களும் உள. ஆகையால் ஒருவேளை விருஷப என்பது விட என மரூஉ மொழியாய் நின்று விஷு வருஷத்தைக் குறிக்கலாம்.

மகரம் பகுத்த திருநாள் என்றிருத்தலால் சரியாய்ப் பார்க்குமிடத்து 1521௵ டிசம்பர்௴ அல்லது 1522௵ ஜனவரி௴ முதற்றிருவிழா ஆரம்பித்திருக்கலாம். அஃதெப்படி யெனின்

டெய்வத் திருத்தே ருருட்டியது போலவிச்
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய் சரவணப் பொய்கையாய் தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. (சு)

மருத்தோய் சுருப்பொலி கவித்தகற் பகமாலை
மவுலித் தலைத்தேவரு
மாதவர் களுஞ்சிறை புக்கடிக் கடிமுன்
முறையிட்ட பொழுதுமுழுதும்

பெருத்தேர் துரக்கும் பிரானே வலிற்கைவேலை
பிரிதந்து தென்புலம்போய்ப்
பேரிட்ட சூரனைப் பாரிடத் தானைப்
பெருங்கடற் கொண்டுபொருநாட்

1521௵ மார்ச்சு௴ 27௳ *விஷு வருஷம் பிறந்ததெனின், அவ் வருஷத்திய தை௴ 1521௵ டிசம்பர் மாதத்திறுதியும் மறு வருஷம் ஜனவரி மாதத்திற் பெரும்பான்மையுமாம்.

* சென்னை ஹைக்கோர்ட்டில் உதவி ரிஜிஸ்ட்ராரா யிருந்த **கிருஷ்ணசுவாமி நாயுடு** அவர்களால் தொகுக்கப்பட்டு ராபர்ட்டு **ஸியூவெல்** துரையவர்களால் பதிப்பிக்கப்பட்ட **தென்னிந்தியா காலக்கிரம அட்டவணை**, 62-ஆம் பக்கம் பார்க்க.

*[ Vide page 62, **South Indian Chronological Tables** prepared by **W.S. Krishnaswami Naidu,** the late Asst. Registrar, High Court and edited by **Robert Sewell.**]

எ. பாரிடம்=பூதகணம்.

குருத்தோர் மதிக்கின்ற கோட்டுமலை கோட்டுடைக்
குருகின் பெயர்க்குன்றமும்
குவலயத் தாழியுந் தூளெழப் பத்துமா
ருதமுமுட் கோல்கடாவுந்
திருத்தே ருருட்டியது கண்டிலார் காணவிச்
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய் சரவணப் பொய்கையாய் தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. (எ)

தூயசெங் கோடையும் பழனியுந் தணிகையுஞ்
சுற்றிய விடைக்கழியுமுற்
சொல்லிய விராலியுஞ் சிகரமுஞ் சகரர்கைத்
தொடுகடற் சூழுமீழத்
தையதென் கதிர்காம மென்னுமலை முதலாய
தாகத் திருப்புகழெழு
வருணகிரி நாதன்பு கழ்ந்தபல மாலையு
மறிவருள மிக்கதமிழால்
வையக மதிக்கும் பரங்குன்றமுஞ் செந்தில்
வந்தசீ ரலைவாயுநீர்
வளவயற் றிருவாவி னன்குடியு மேரகமு
மருவுகுன் றுதொறாடலும்
செய்ய பழமுதிர் சோலைமலையு நிலையாயவா
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய் சரவணப் பொய்கையாய் தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. (அ)

### வேறு

வீடாம ரப்பெரிய கோடாட முப்பொழுதும்
வீழ்மாம் பழத்தினை முதோ
வீருலு யிர்க்குலமி ருலாமி னத்தைமன
விழைவோ டலைத்தமழையோ

வேடாவ யப்பகடு கோடாயி ரத்தினடி
யொழியா தொழுக்குமதமோ
வோராயி ரத்துறையி னூராத னைக்குறவ
ரொழியா வளக்குருதியோ

நாடாவி கற்பவினை யாடாமு கத்தினிய
நறுநாக முற்றநறவோ
நாளுவி தத்தருவி தாளுமெ னப்பரவி
நதிகோடி யிற்பொருதுபாய்

சேடாச லத்தகிரி யூடாத ரிக்குமுகில்
சிறுதே ருருட்டியருளே
சேயூர தத்துபரி மாயூர சத்திதர
சிறுதே ருருட்டியருளே. (௧)

வாயே மலர்க்குமுத மாயே சிவப்பொழுகு
மறையே மணக்குமிறையே
வானூறு மக்கடவுண் மீனூறு முத்தமுலை
வயன்மேல் விளைத்தபயிரே

போயே கதிக்கணுகு தூயார் பிறப்பிரவு
பொரவே யுதித்தகதிரே

---

௧. நறவு=தேன். முகில்=மேகம்.

போகாலை யத்தமரர் மாகால்வ ளைத்ததளை
புதிதேது மித்தவரமே
சாயேமெ னப்பொருத மாயாவி தத்தவுணர்
தமதா ருயிர்க்குமமனே
தாராத ரப்புரவி வீராக ரக்குலிசா
ஞ்ருவாழ வைத்தகுருவே
சேயேயெ னக்கினிய தாயேய ருத்திகொடு
சிறுதே ருருட்டியருளே
சேயூர தத்துபரி மாயூர சத்திதர
சிறுதே ருருட்டியருளே. (௧௦)

சிறுதேர்ப் பருவம் முற்றிற்று.

ஆகப் பருவம் ௧௦-க்கு செய்யுள் ௧௦௦.

*சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.





* 'சேயூர்க் கந்தர் பிள்ளைத்தமிழ்', 'சேயூர் சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ்' என்னும் பாடபேதமுமுள.

# செய்யுண் முதற்குறிப்பகராதி.

பக்கம்.

# அநுபந்தம்.

அந்தகக்கவி வீரராகவ முதலியார், ஈழநாட்டரசனாகிய பர ராசசிங்கன் சமுகத்தில் தாமியற்றிய பிரபந்தங்களிற் சிலவற்றை யரங்கேற்றிய பின்னர், ஒருநாள் அரசன் அவரைநோக்கி "ஐய, தாங்கள் கம்பராமாயணம் ஒருநாள் பிரசங்கம் செய்யவேண்டும்" என்ன, அதற்கவர் "கம்பராமாயணம் என்னும் ஒரு நூல் உளதோ!" வென்றுசொல்ல, அரசன் அங்குள்ள புலவர்களிலொருவரை அந் நூலினைக் கொணரும்படிசெய்து கவிராயருடைய சீடரிடம் கொடுத்து அதனைக் கவிராயர்க்குத் தெரிவிக்க அவர் அதினின்றும் சில பாடல்களை எடுத்துப் படிக்கச்சொல்லி அனைவரும் ஆனந்த பரவசமாம்படி பிரசங்கஞ்செய்து நிறுத்தி, அரசன் அரண்மனை சென்ற பின்னர், கம்பராமாயண நூலினின்றும் ஏடுகளை உருவி அங்கிருந்த புலவர் பலரிடத்தும் பற்பல ஏடுகளைக் கொடுத்து வாசிக்கச்சொல்லிப் படித்து முடிந்ததும் அவற்றைக் கட்டிவைத்துப்போம்படி செய்து மறுநாட் காலையில் அரசன் பட்டி மண்டபத்துக் கவிராயர் வழக்கப்பிரகாரம் சென்று, மனக்கிலேசத்துடன் இருப்பார்போன்று தன் முகக்குறிப்பால் அரசர்க்குத் தெரிவிக்க, குறிப்பறிந்த குரிசில் குரவரைநோக்கி, "ஐயா! இளைப்பும் களைப்பும் அடைந்தோர் போன்று தோற்றுகின்றீர். இதற்குயாது காரணம்?" என, கவிராயர், "ஏ நிருப. நேற்றிரவெல்லாம் இராமாயணப் போர் எப்படி செய்தேன். அதனால் வந்த களைப்பு இது" என்ன, அரசன், "அப்படியானால் கண்டு முதல் யாதோ" என்ன, அதற்கவர் "ஐயா, அடித்தது பன்னீராயிரம்; கைக்கெட்டியது நாலாயிரம், கல் இரண்டாயிரம், பத ராறுயிரம் என்று சொல்லிப் பண்புடையவெனப்பட்ட நாலாயிரம் பாக்களின் கருத்தை எடுத்துப் பண்புடன் தொடுத்து பரராசசேகரன் பரமானந்தங்கொள்ள இராமகாதையை இனிதெடுத்துரைத்தார். இதைக் கேட்டு மகிழ்ந்த பரராச சேகரன் கவிராயரைப் புகழ்ந்து பாடினன். அச்செய்யுளை முகவுரையின் 17-ம் பக்கத்தின் முதலிற் காண்க. கவிராயர் தொடுத்த செய்யுள் இப்போதகப்படவில்லை.

# வேறுபாடமும் திருத்தமும்.

| பக்கம் | வரி | | வேறுபாடமும், திருத்தமும். |
|---|---|---|---|
| 3 | 19 | திறவிட்ட | திறவுற்ற |
| ,, | 21 | சிவபாமை | சிவபரம |
| ,, | ,, | திலதத்தி | திலகத்தி |
| 4 | 12 | விறல்கொடு | விரல்கொடு |
| ,, | 13 | முதுமறை | முலைமழை |
| ,, | 16 | மதியை மதிதவமு: | மதிய மதிறவரு |
| 5 | 17 | மோதக | மோதன |
| ,, | 25 | சூரபன்மஞ்கிய மாமரம் | மயில் |
| 6 | 25-26 | சுடர் சுடுமென்று மேங்கிச் | சுடர்சுடுமென் றேங்கிச் |
| 7 | 22 | நாட்டுப்பிறையூர் | நாட்டுட் பிறையூர் |
| 8 | 14 | விடுக்கவுலகுக் | விடுநா ளுலகுக் |
| 9 | 11 | மூன்றுமா | மொன்றுமா |
| 10 | 14 | பெயருர | பெயருர |
| 11 | 13 | பிறங்க | பிறங்கக் |
| ,, | 18 | காவலன் | காவலின் |
| ,, | 20 | பரிகரித்தேவி | பரிகரத்தேவி |
| ,, | 26 | கரித்தேவி=தெய் வானையம்மையார் | பரிகரத்தேவி=காளி |
| 12 | 15 | தருக்கிரைதரப் | தருக்கரைதரப் |
| 13 | 3 | புலத்தாமரை | பொலந்தாமரை |
| 15 | 9 | யெந்தாயென் | யெந்தாயுன் |
| 16 | 5 | சங்கோடுங் | செங்காடுங் |
| 18 | 2 | சங்குமிளங்கொடி; | செங் குமுழுங்கொடி |

| பக்கம் | வரி | | வேறுபாடமும், திருத்தமும். |
|---|---|---|---|
| 19 | 6 | தவரை | தலவை |
| ,, | 14 | கிறைவிப் | கிறைவி |
| 21 | 3 | நோவாய் | நோய் வாய் |
| 22 | 4 | மதி | விம |
| ,, | 13 | மழுவுருக்குவன | மடுவுழக்குவன |
| 23 | 2-3 | ... ... ... ... | வடையு மெப்படியு மொடிவலத்தில்வரு மதிகதித்துரக தாலேலோ |
| ,, | 16 | முகமுகத்துவிடு | முகமுதுத்துவிடு |
| 25 | 2 | புலத்தண்டை | பொலந்தண்டை |
| ,, | 28 | கூழை=வலோந்த | கூழை=பெண்மயிர் |
| 27 | 18 | நகராளி | நகராளி |
| 29 | 19 | பற்குரு | பற்குரு |
| 32 | 8 | கொத்தும் | கொத்துப் |
| 33 | 4 | தோறும | தோறும் |
| ,, | 5 | வெருண்டெமு | வெகுண்டெழு |
| 35 | 14 | கிரைத் | நிரைந் |
| 36 | 18 | யவநுங்கை | யவஞ்வகை |
| ,, | 19 | வகைபோரொழு | வகையூற்றெழு |
| 38 | 12 | முததமோ | முத்தமோ |
| ,, | 23 | புகுத | புகுதப் |
| 39 | 9 | மொரு | பொரு |
| 40 | 8 | கருந்தாட் | குறுந்தாள் |
| ,, | 11 | மழையப் | மழையைப் |
| ,, | ,, | கழித்துஞ் | இழித்துஞ் |
| ,, | 12 | சுரும்பாற் | சுரும்பார் |
| 41 | 2 | பம்பிற் | பம்பிக் |
| ,, | 9 | கரவாமே | காவாமே |
| ,, | 19 | பார்க்குந்தரளு | பரக்குந்தரளும் |

| பக்கம் | வரி | | வேறுபாடும், திருத்தமும். |
|---|---|---|---|
| 41 | 22 | ஆரவாரம் | நெருக்கம் |
| 44 | 22 | சாறுங் | சாறு |
| 45 | 20 | மலைகள் | மமலைகள் |
| 46 | 8 | நெறி | வெறி |
| 48 | 9 | மிவன்கணையின் | மிவன் நகரை |
| 51 | 2 | முதனுரி | முதனுளில் |
| ,, | 20 | ணினணீ | ணின்னணீ |
| 56 | 3 | றுவரிற் | றுவரிப் |
| 58 | 13 | புண்ட முதத்தைக் : | யுண்டமு தமணைக் |
| 60 | 14 | வேற்பழனிலா | வெற்பழனிலா |
| ,, | 20 | தமுதுநீர் | தழுதுநீர் |
| 62 | 20 | மதிகவிர லைப்பனைகவர் | மதிகவி றலைப்பகவர் |
| ,, | 24 | னினைத்தவலை | னினைத்தலலை |
| 64 | 16 | சிறியேன் | சிறியேஞ |
| ,, | 18 | ஷை | ஷை |
| 68 | 19 | றறிந்து னிடத் திரங்கி | றீந்துனிலத் திறங்கி |
| 70 | 2 | கடவுளினத்தின் | கடவுளேத்தன் |
| ,, | 13 | யமன் | மயன் |
| 74 | 20 | பரம்பரம | பரம பா |
| 75 | 15 | வாயிரக் | வாயிரைக் |
| ,, | 18 | கூடர்திரித்தண்ட : | கூடந்திறந்தண்ட |
| 76 | 2 | மகன் | மகண் |
| 78 | 2 | ... ... ... ... | குருத்தேர் மதிக்கொழுங் கோடுழுங் கோடுடைக் |
| 80 | 15 | சேயூர் சுப்பிர மணியார் | சேயூர்ச்சுப்பிர மணியர் |